# தாழ்வு மனப்பான்மை

★

பெ. தூரன்

★

அமுத நிலையம் லிமிடெட்
தேனும்பேட்டை :: சென்னை-18

# தாழ்வு மனப்பான்மை

## 1

## நாகரிகப் பேச்சு

“அவரா? அவருக்கு ஒரே தாழ்வு மனப்பான்மை ஆச்சே? அதனால்தான் அவர் அப்படி நடந்துகொள்கிறார்” என்றான் என் நண்பன் சந்திரசேகரன்.

“அவருக்கேதடா தாழ்வு மனப்பான்மை? நான் யாரைப் பற்றிப் பேசுகிறேன் என்பது உனக்குத் தெரியுமோ இல்லையோ?” என்று நான் கேட்டேன்.

“எல்லாம் தெரியும். அந்த ஓவியரைப் பற்றித்தான் நானும் சொல்லுகிறேன். அவர் மற்ற ஓவியர்களிடம் பொறாமையும் எரிச்சலும் கொள்ளுவதற்கு அவருடைய தாழ்வு மனப்பான்மைதான் காரணம். அது எனக்கு நன்றாகத் தெரியும்” என்று மேலும் அழுத்தந் திருத்தமாகப் பதில் சொன்னான்.

“தாழ்வு மனப்பான்மை என்றால் என்னவென்று உனக்குத் தெரியுமா?” என்று நான் கேட்டேன்.

“டேய், அதைப் பற்றி எனக்கொன்றும் தெரியாதென்று நினைத்துக்கொள்ளவேண்டாம். நீ கொஞ்சம் உளவியல் படித்தவனென்று உயர்வு மனப்பான்மை

கொள்ள வேண்டாம்" என்று கொஞ்சம் குத்தலாகவும் வருத்தத்தோடும் அவன் சொன்னான்.

"அடே, அப்படியொன்றும் இல்லையடா—தாழ்வு மனப்பான்மையைப் பற்றி உன்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ளத்தான் கேட்டேன்" என்று சமாதானப்படுத்தும் முறையில் பேசினேன்.

"உலகத்திலே இன்றைக்கு இந்தத் தாழ்வு மனப்பான்மைதான் எங்கு பார்த்தாலும் தாண்டவமாடுகிறது. தாழ்வு மனப்பான்மையின் காரணமாகத்தான் எத்தனையோ விபரீதங்கள் நடக்கின்றன" என்று என் நண்பன் பெரிய பிரசங்கத்தையே ஆரம்பித்துவிட்டான்.

தாழ்வு மனப்பான்மை, மனக்கோட்டம், தாழ்வு மனக்கோட்டம், சிக்கல் என்றிப்படியெல்லாம் பேசுவது இன்று சாதாரணப் பழக்கமாகிவிட்டது. எல்லா இடங்களிலுமல்ல; நவீனப் படிப்பும், நாகரிக வாழ்க்கையும் மிகுந்துள்ள சமூகங்களிலே இது பழக்கமாகிவிட்டது. மேல் நாடுகளிலே மிக அதிகம்; நம் நாட்டில் இது மெதுவாகத் தலைகாட்டத் தொடங்கியிருக்கிறது.

பத்திரிகை விளம்பரங்களும், புதிய உளவியலை அடிப்படையாகக் கொண்ட கதைகளும், சினிமாப் படங்களும் இந்தப் பழக்கத்தை ஓங்கச் செய்வதில் உதவியாக நிற்கின்றன.

தாழ்வு மனப்பான்மை என்ன என்று தெளிவாகத் தெரிந்துகொள்ளாமலே இப்பொழுது பலர் அதைப் பற்றிப் பேசத் தொடங்குகிறார்கள். தாழ்வு மனப்பான்மைதான் காரணம் என்று எதற்கெடுத்தாலும் காரணம் கற்பிக்கவும் தொடங்குகிறார்கள். அது நவீன நாகரிகத்தின் அறிகுறியாகவும் இடம்பெற முயல்கிறது.

சில நாட்களுக்கு முன்பு எனது நண்பர்களில் ஒருவர் வீட்டிற்குச் சென்றிருந்தபோது ஒரு சுவையான சம்பாஷணையில் கலந்துகொள்ள நேர்ந்தது. என் நண்பரும் அவர் மனைவியும் நானும் பல விஷயங்களைப் பற்றி மனம்விட்டுத் தாராளமாகப் பேசிக்கொண்டிருந்தோம். ஒருவர் மேல் ஒருவர் குறை கூறுவதையும் அந்தச் சமயம் விலக்காகக் கொள்ளவில்லை. என் நண்பர் கொஞ்சம் ஒதுக்கமாக இருப்பவர்; யாருடனும் அதிகமாகப் பழகமாட்டார்; சாதாரணமாக அவர் உறவினர் வீட்டுக்குப் போகிற வழக்கமில்லை. அவருடைய இந்தக் குணங்கள்தான் என்னை அதிகமாகக் கவர்ந்து அவருடைய நட்பைத் தேடும்படி செய்தது. அவருடைய மனைவி அவர் உறவினருடைய வீடுகளுக்குப் போகாதிருப்பதைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள். அவளுக்கு ஊர் சுற்றுவதிலும் அரட்டை அடிப்பதிலும் பிரியம் அதிகம்.

"அவர் ஏன் எங்கும் போகிறதில்லையென்று உங்களுக்குத் தெரியுமா?" என்று என்னைக் கேட்டாள்.

"நீங்களே சொல்லுங்கள். உங்களுக்குத்தான் என்னை விட நன்றாகத் தெரிந்திருக்க முடியும்" என்றேன் நான்.

"அவருக்கு ஒரு தாழ்வு மனப்பான்மை; அதுதான் காரணம்" என்று அவள் கூறினாள்.

எனக்கு விஷயம் புரியவில்லை. "எதனால் தாழ்வு மனப்பான்மை?" என்று கேட்டேன்.

"அவருக்கு ஒரு கால் கொஞ்சம் குட்டையாக இருக்கிறதனால் சிறிது சாய்ந்து சாய்ந்து நடக்கிறாரல்லவா? அதனால் மற்றவர்களோடு பழகுவதற்கு அவர் கூச்சப்படுகிறார். ஆனால் அது அவருக்கே தெரிந்திருக்காது. அவர் மனத்திற்

குள்ளேயே அப்படி ஒரு தாழ்வு மனப்பான்மை இருக்கிறது" என்று அவள் வெளிப்படையாகச் சொன்னாள்.

இந்தத் தாழ்வு மனப்பான்மை என்கிற எண்ணம் எங்கெல்லாம் புகுந்துவிட்டது என்பது அப்பொழுதுதான் எனக்குத் தெளிவாகியது.

என் நண்பருக்குத் தாழ்வு மனப்பான்மை இருக்கிறதோ இல்லையோ அது நிச்சயமாகத் தெரியவில்லை; யாரும் அதை ஆராய்ந்து இதுவரையில் முடிவுகட்டவில்லை. ஆனால் அன்று எனக்கு ஒரு விஷயம் நிச்சயமாயிற்று. என் நண்பருடைய மனைவிக்கு அவருக்கு ஒரு கால் குட்டையாக இருப்பதைப் பற்றிய கவலை மனத்திலே அழுந்திக் கிடந்தது என்பது அன்று வெளியாகிவிட்டது.

தாழ்வு மனப்பான்மை அல்லது அதை விஞ்ஞான ரீதியில் வரையறுத்துச் சொல்லவேண்டுமானால் தாழ்வு மனக்கோட்டம் என்கிற இந்தப் புதிய கருத்து எவ்வளவு தூரம் நமது வீட்டிற்குள்ளும் நுழைந்திருக்கிறது என்பதை எடுத்துக் காட்டவே இந்தச் சம்பவத்தை இங்கே குறிப்பிடுகிறேன். இவ்வாறு இந்தக் கருத்துச் சரியாகவோ, தவருகவோ நம்மைப் பல வழிகளில் தாக்குவதால் இதைப் பற்றித் தெளிவாக அறிந்துகொள்வது நல்லது. தவருன அறிவு வீண் குழப்பத்தையும் சிக்கல்களையும் உண்டாக்கக் கூடுமல்லவா?

மேலும், வாழ்க்கையில் உண்மையாகவே தாழ்வு உணர்ச்சி ஏற்படுவதற்கான பல சந்தர்ப்பங்கள் உண்டாகின்றன. வீட்டிலே வளருகின்ற குழந்தை, பள்ளியிலே பயிலுகின்ற சிறுவன், வாழ்க்கைப் போராட்டத்திலே ஈடுபட்ட இளைஞன், வயது முதிர்ந்த கிழவன் ஆகிய எல்லோரையும் தாழ்வுணர்ச்சி வெவ்வேறு வகையில் பீடிப்ப

தற்கான நிலைமைகள் தோன்றுகின்றன. இவற்றைப் பயன்படுத்திக்கொண்டு தங்கள் வியாபாரத்தைப் பெருக்கிக் கொள்ள எத்தனையோ தந்திரமான விளம்பரங்களை நாம் நாள்தோறும் பார்க்கிறோம். போட்டியை அடிப்படையாகக் கொண்ட இன்றைய சமூகத்திலே தாழ்வுணர்ச்சிக்கு ஆதிக்கம் செலுத்த நல்ல வாய்ப்பும் கிடைக்கிறது.

ஆதலால் தாழ்வுணர்ச்சி, தாழ்வு மனப்பான்மை என்றெல்லாம் சொல்லுவதின் பொருளென்ன, அது எப்படி உண்டாகிறது, அதனால் ஏற்படும் நன்மை தீமைகள் என்ன என்பனவற்றை நாம் தெளிவாகத் தெரிந்துகொள்வது நல்லது.

## 2

# தாழ்வுணர்ச்சி—உயர்வுந்தல்

காலணு நாணயம் புதிதாக உருவாகி வெளிவரும்போது பார்த்திருக்கிறீர்களா? அதற்கு ஒரு தனிப் பளபளப்பிருக்கும். அதில் பொறிக்கப்பட்டிருக்கும் உருவங்களும், எழுத்துக்களும் தெளிவாக விளங்கும். ஆனால் அந்த நாணயம் புழக்கத்தில் கைமாறிக் கைமாறிச் செல்லும்போது மெதுவாக அதன் பளபளப்பும் உருவத்தெளிவும் மறைந்து விடுகின்றன. கடைசியிலே அது ஒரு வட்டகத் தகடு போல உருவமும் எழுத்தும் இல்லாமல் மழுங்கிப்போய் விடுவதுண்டு. இதே கதி சில சொற்களுக்கும் ஏற்படுகின்றது. முதலில் அவற்றிற்கிருந்த பொருள் கொஞ்சம் கொஞ்சமாக மழுங்கிப் போகின்றது. மனக் கோட்டம் என்ற சொற்றொடரும் இப்படித்தான் பொருள் மாறுபட்டு வந்திருக்கிறது. சிலர் இதை மனச்சிக்கல் என்று குறிப்பிடுவார்கள். சிக்கல் என்று ஒரே சொல்லால் வழங்குவதுமுண்டு.

ஆஸ்திரியா நாட்டவரான சிக்மண்ட் பிராய்டு (Sigmund Freud) என்பவர் உளவியலில் ஒரு புதிய சகாப்தத்தை உண்டு பண்ணியவர். அவர்தான் மனத்திலே அடிமனம் என்ற மறைந்திருக்கும் பாகம் ஒன்று உண்டென்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டியவர். அடிமனத்திற்கு மறைமனம், நனவிலிமனம் என்றும் பெயருண்டு. அதிலே மறைந்திருக்கும்படியான உணர்ச்சிகளும் ஆசைகளும் சாதாரணமாக நமக்குத் தெரிவதில்லை. நமது

நனவிலே அவை வருவதில்லை. அதனாலேயே நனவிலி மனம் என்று அதற்குப் பெயர் வந்தது. மறைந்திருப்பதால் மறைமனம் என்கிறோம். இந்த நனவிலி மனம் தனிப் பகுதி யென்று நினைக்கக்கூடாது. மனத்தின் தன்மையை ஆராயும்போது அதன் முக்கியமான மூன்று வகை நிலைகளைக் கொண்டு அதை நனவு மனம், இடை மனம், நனவிலி மனம் என மூன்றாகப் பிரித்திருக்கிறார்கள். சாதாரணமாக வாழ்க்கையில் தொழிற்படுவது நனவுமனம். நாம் பல விஷயங்களைப் பற்றிச் சிந்திக்கிறோம். சிந்தித்துப் பார்த்து ஒரு முடிவுக்கு வந்து அதன்படி நடக்கிறோம். இவையெல்லாம் நனவு மனம் என்ற பகுதியிலேயே நடைபெறுவதாகக் கூறலாம். சில சமயங்களிலே சில விஷயங்கள் சட்டென்று நமது ஞாபகத்திற்கு வருவதில்லை. யாராவது ஒருவருடைய பெயர் உடனே நினைவுக்கு வராமற் போவதுண்டு. 'கொஞ்சம் சிந்தித்தால் சற்று நேரத்தில் அது நினைவுக்கு வந்துவிடுகிறது. அது நனவு மனத்தைவிட்டுச் சற்று ஆழ்ந்து இடை மனத்திலிருந்ததால் நினைவுக்கு வரச் சிறிது தாமதமாயிற்று' என்று சொல்லுகிறோம். ஆனால் நனவிலி மனப் பகுதியில் உள்ள விஷயங்கள் இவ்வளவு எளிதில் நனவு மனத்திற்கு வந்துவிடமாட்டா. அவைகளை வெளிக்கொணர்வது கடினம். அவை அப்படி உள்ளே அமுங்கிக் கிடந்தாலும் அவை தான் மனிதனைத் தமது விருப்பப்படி யெல்லாம் ஆட்டிவைக்கின்றனவாம். அவற்றினுடைய வலிமை மிகப் பெரிதாம்.

மனத்தைப் பற்றி இங்கு விரிவாக எழுதுவதற்கு இடமில்லை. தாழ்வு மனக் கோட்டத்தைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு ஓரளவு மனத்தின் பலநிலைகளையும்

நினைவூட்ட வேண்டுமென்றே இங்குக் குறிப்பாகச் சில விஷயங்களைக் கூறுகிறேன்.*

மனத்தின் அடிப்பகுதியாகிய, அதாவது மறைந்து நிற்கும் பகுதியாகிய, நனவிலி மனத்தைப் பற்றி விரிவாக ஆராய்ந்து முதன் முதலாகப் பல கருத்துக்களை வெளியிட்டவர் சிக்மண்ட் பிராய்டு என்ற ஆஸ்திரியா தேசத்து அறிஞராவர். மனத்தைப் பாகுபாடு செய்து பார்க்கும் புதிய முறையொன்றையும் அவர் வகுத்தார்.. அதனால் அவர் தோற்றுவித்த உளவியலுக்கு உளப்பகுப்பியல் அல்லது மனப்பகுப்பியல் என்றே பெயர் ஏற்பட்டிருக்கிறது.

சிக்மண்ட் பிராய்டுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள் யுங் (C. G. Jung) என்பவரும், ஆட்லர் (Adler) என்பவருமாவர். யுங் என்பவர் பிராய்டின் மாணவர். ஆட்லரையும் பிராய்டின் மாணவர் என்று கூறுவதுண்டு. ஆனால் ஆட்லரே அதை ஒப்புக்கொள்வதில்லை. அவர் ஆரம்பத்தில் பிராய்டின் கருத்துக்களை ஆதரித்தார் என்பது மட்டும் உண்மைதான். அவரோடு சேர்ந்து சுமார் பன்னிரண்டு வருஷங்கள் உழைத்திருக்கிறார்.

யுங், ஆட்லர் ஆகிய இருவரும் முதலில் பிராய்டின் மனப் பகுப்பியலை ஏற்றுக்கொண்டு அவரைப் பின்பற்றி ஆராய்ச்சிகள் செய்தார்கள். ஆனால் பின்னால் அவர்கள் இருவரும் பிராய்டின் கருத்துக்களிலிருந்து மாறுபட்டுப் புதிய கருத்துக்களை வெளியிடலானார்கள்.

யுங்கின் கருத்துக்களை இங்கு நாம் விரிவாகத் தெரிந்து கொள்ள வேண்டிய தேவையில்லை. ஆனால் அவர்தான்

---

*மனத்தைப் பற்றி விரிவாக மனமெனும் மாயக்குரங்கு என்ற நூலில் எழுதியுள்ளேன். அந்த விஷயங்களையே இங்குத் திருப்பிக் கூறுவது அவசியமில்லை.

'கோட்டம்' என்ற சொல்லை முதன் முதலில் மனப்பகுப்பியலில் புகுத்தியவர். அந்தச் சொல் முன்பே உளவியலில் ஏதோ ஒரு பொருளில் வழங்கியது. யுங் அதற்குப் புதிய பொருள் கொடுத்தார். பிராய்டு அந்தச் சொல்லுக்கு வேறொரு புதிய பொருள் கொடுத்து அதை நன்கு பயன்படுத்திக்கொண்டார்.

பிராய்டின் மனப்பகுப்பியல் கொள்கைப்படி அடிமனத்தில் வாழ்விலே நிறைவேறாத பலவிதமான ஆசைகளும் உணர்ச்சிகளும் அமுந்திக் கிடக்கின்றன. இந்த ஆசைகளைப் பற்றி மற்றவர்களுக்குத் தெரிந்தால் அவர்கள் அவற்றை ஆமோதிக்கமாட்டார்கள். ஏனென்றால் அவை சமூகத்திலே ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கும் பழக்க வழக்கங்களுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் விரோதமானவை; நல்ல நடத்தை என்று எதை நாம் ஒப்புக்கொள்ளுகிறோமோ அதற்கு மாறாக நடக்கும்படி தூண்டக் கூடியவை அவைகள். ஆகையால்தான் மனிதன் அவற்றை அமுத்தி வைக்கப் பார்க்கிறான். அவனுடைய அறிவும் மனச்சாட்சியும் அப்படிச் செய்யும்படி அவனைத் தூண்டுகின்றன. இவ்விதமாக அடிமனத்திலே அமுந்திக் கிடக்கும் தீராத ஆசைகள், இழிந்த உணர்ச்சிகள் முதலியவற்றால் ஏற்படும் சிக்கலை பிராய்டு 'கோட்டம்' என்ற சொல்லால் குறித்தார்.

அடிமனத்தில் அதாவது நனவிலி மனத்தில் அமுந்திக் கிடக்கும் இழிந்த இச்சைகளும், உணர்ச்சிகளுமே மறைவாக நின்று ஒரு மனிதனுடைய வாழ்க்கையைப் பாதிக்கின்றன; அவற்றிற்கு வலிமை பெரிது என்பது பிராய்டு வகுத்த கொள்கை. அவர் இந்த நனவிலி மனத்திற்கே முக்கியத்துவம் கொடுத்தார். அதற்கு முக்கியத்துவம் கொடுத்ததோடு 'பாலுணர்ச்சியே' மிகவும் வலிமை வாய்ந்தது என்றும், அதுவே மனிதனுடைய வாழ்க்கை

யின் போக்கை அமைப்பதில் பிரதானமான இடம் வகிக்கிறது என்றும் கூறினர்.

ஆண் பெண் கலவி சம்பந்தமாக ஏற்படும் அவாவை 'இணைவிழைச்சு' என்ற பெயரால் சங்க காலத்திலேயே தமிழர்கள் வழங்கி வந்துள்ளார்கள். பாலுணர்ச்சி என்ற சொல்லுக்கு இணைவிழைச்சு என்ற பொருளோடு இன்னும் விரிவான பொருளை பிராய்டு முதலியோர் கொடுத்திருக்கிறார்கள். குழந்தைப் பருவத்திலேயே இந்தப் பாலுணர்ச்சி வலிமையோடிருப்பதாக பிராய்டு கூறுகிறார். அதுவே வெவ்வேறு வடிவங்களில் மனிதனுடைய வாழ்க்கையில் முக்கிய அம்சமாக நின்று அவனுடைய வாழ்க்கையின் போக்கை நிருணயிக்கிறது என்பது அவர் கண்ட முடிவு. பிராய்டு இந்தப் பாலுணர்ச்சிக்கு லிபிடோ என்று பெயர் கொடுத்தார். அவருடைய மனப்பகுப்பியல் கொள்கையின்படி லிபிடோதான் தலைமை ஸ்தானம் வகிக்கிறது. அதுவே மனிதனுடைய வாழ்க்கை அமைப்பைத் தீர்மானம் செய்கிறது.

பாலுணர்ச்சிக்கு இவ்வளவு முக்கியத்துவம் கொடுப்பதை ஆட்லர் ஆமோதிக்கவில்லை. மனத்தில் உண்டாகும் கோட்டங்களுக்கும், ஒருவனுடைய வாழ்க்கையில் ஏற்படும் கோளாறுகளுக்கும் பாலுணர்ச்சியே அடிப்படை என்றும், அதிலிருந்தே அவை முளைக்கின்றன என்றும் பிராய்டு வற்புறுத்துவதை ஆட்லர் ஒப்புக்கொள்ள மறுத்தார். பாலுணர்ச்சியால் ஏற்படும் சிக்கல்களை அவர் ஏற்றுக்கொண்டாலும், அதுவே அடிப்படையாக வாழ்க்கையின் போக்கிற்கே காரணம் என்பதை அவர் சரியெனக் கருதவில்லை.

வாழ்க்கையின் போக்கை அமைப்பதில் தலைமை ஸ்தானம் வகிப்பது 'உயர்வுந்தல்' என்று அவர் கூறினர்.

தான் ஏதாவது ஒரு வகையில் மற்றவர்களைக் காட்டிலும் உயர்வுடையவனாக இருப்பதாகக் காட்டிக்கொள்ள வேண்டும் என்ற ஆவலே மனிதனுடைய வாழ்க்கையில் முக்கிய ஸ்தானம் வகிக்கிறது; பாலுணர்ச்சியும் இதற்குக் கீழடங்கியதுதான் என்பது ஆட்லர் கருத்து. மனிதனுடைய நடத்தையும் அவனுடைய மனோபாவங்களும் தனது உயர்வை மற்றவர் முன்னிலையில் நிலைநாட்டவேண்டும் என்ற அடிப்படையையே கொண்டிருக்கின்றன. இதைத் தான் ஆட்லர் உயர்வுந்தல் என்று குறித்தார். மற்றவர்களைவிடத் தான் ஒரு வகையில் உயர்ந்தவன் என்று நிலைநாட்டவேண்டுமென்று உள்ளத்திலே எழுகின்ற வேகம் என்று இதைச் சொல்லலாம்.

பிராய்டும் ஆட்லரும் மன நோய்களைத் தீர்க்கும் முயற்சியில் முதலில் ஈடுபட்டார்கள். அந்த முயற்சியில் ஏற்பட்ட அனுபவங்களையும் ஆராய்ச்சிகளையும் கொண்டு பாலுணர்ச்சியே வாழ்க்கையின் போக்கை அமைக்கிறது என்ற முடிவுக்கு பிராய்டு வந்தார். நான் முன்பே குறிப்பிட்டுள்ளபடி பாலுணர்ச்சியின் முக்கியத்தை ஆட்லர் மறுக்கவில்லையாயினும், வாழ்க்கையின் போக்கை அமைப்பதில் உயர்வுந்தலே முதல் ஸ்தானம் வகிக்கிறது என்ற முடிவுக்கு இவர் வந்தார். இவ்வாறு முடிவுகள் வேறுபடவே இருவரும் பிரிந்து தனித் தனியாகத் தமது கொள்கைகளின்படி மனநோயைத் தீர்ப்பதில் முனைந்தார்கள். தமது ஆராய்ச்சி முடிவுகளைப் பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்; பல நூல்களும் எழுதினார்கள். தாழ்வு உணர்ச்சி, உயர்வுந்தல் முதலிய கருத்துக்களுக்கு முக்கிய ஸ்தானம் கொடுத்து அவற்றை விரிவாக ஆராய்ந்தவர் ஆட்லரே யாவார்.

# 3

# உயர்விலே ஆசை

மனக்கோளாறுகளின் காரணத்தைக் கண்டுபிடிப்பதற்கு அடிமனத்தில் அமுந்திக் கிடக்கும் சிக்கல்களைக் கண்டறிந்து வெளிப்படுத்துவதே முக்கியம் என்று பிராய்டு அதில் கவனம் செலுத்தினர். பாலுணர்ச்சி அல்லது பாலுந்தல்தான் மனிதனுடைய வாழ்க்கையில் முக்கிய ஸ்தானம் வகிக்கிறது என்று பிராய்டு கருதுகிருரல்லவா? இந்தப் பாலுந்தலினுல் ஏற்படும் தகாத இச்சைகளும், இழிந்த உணர்ச்சிகளும் மேலோங்காதவாறு மனிதனுடைய மனச்சாட்சி தடுக்க முயல்கிறது. இதனுல் மனத்தில் ஒரு போராட்டம் ஏற்பட்டுச் சிக்கல்கள் தோன்றுகின்றன. இவ்வாறு அமுக்கி வைக்கப்பட்ட இழிந்த உணர்ச்சிகள் அடிமனத்தில் தங்கியிருந்து நேரான பாதையை விட்டுக் குறுக்கு வழிகளில் திருப்திபெற முயல்கின்றன. இதுவே மன நோய்களுக்குக் காரணம். ஆதலால் அந்த இழிந்த உணர்ச்சிகளை அடிமனத்திலிருந்து வெளிக் கொணர்ந்து அவற்றை நோயாளி உணரும்படி செய்துவிட்டால் மன நோய் நீங்கிவிடும் என்ற முடிவுக்கு வந்து, இதற்கான வழிமுறைகளை வகுப்பதில் பிராய்டு ஈடுபட்டார்.

தகாத இச்சைகளை அடக்கி மேலோங்காமல் செய்வதில் மனச்சாட்சி எந்த நிலையிலும் ஒரே மாதிரி எச்சரிக்கையாக இருப்பதில்லை. தூங்கும்போது இந்த மனச்சாட்சியின் கவனம் சற்றுத் தளர்கிறது. அதனுல் அந்தச்

சமயத்தில் அடிமனத்தில் அழுந்திக் கிடக்கும் தகாத இச்சைகள் கனவாக வெளிவந்து ஓரளவுக்குத் திருப்தி பெற முயல்கின்றன. ஆனால் கனவில் வரும்போது நனவு நிலையில் வருவதுபோலவே இவை நேரடியாகத் தம் சுய ரூபத்தோடு வருவதில்லை. அப்படி வந்தால் மனச்சாட்சி என்ற காவற்காரன் விழித்துக்கொள்வானே என்ற பயம் இவைகளுக்கு உண்டு போலிருக்கிறது. அதனால் அவை மாறு வேடம் பூண்டு குறியீடுகளைப் போலவும் நாடக வேஷக்காரர்களைப் போலவும் தோன்றுகின்றன. அந்தக் குறியீடுகளின் பொருளையும் நாடக வேஷங்களின் பொருளையும் கண்டறிய முடியுமானால் அந்தத் தகாத இச்சைகள் எவை என்று கண்டுகொள்ளலாம். ஆதலால் கனவைப் பகுத்துப் பார்த்து ஆராய்ச்சி செய்வதில் பிராய்டு கவனம் செலுத்தினார். இவர் வகுத்த இந்த முறைக்குக் கனவுப் பாகுபாட்டு முறை என்று பெயர்.

கனவை ஆராய்வதோடு மட்டும் அவர் நின்றுவிடவில்லை. அடிமனத்தில் அழுந்திக் கிடக்கும் இச்சைகளை வெளிப்படுத்துவதற்கு அவர் 'தடையிலாத் தொடர் முறை' என்று மற்றொரு முக்கியமான முறையையும் வகுத்தார். மன நோயால் துன்புறுகிறவர்களை ஏகாந்தமாக ஒரு தனியறையில் படுக்கச் செய்து சில குறிப்பான வார்த்தைகளைச் சொல்லுவதன் மூலம் அவருடைய உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களையெல்லாம் ஒளிவு மறைவின்றி வெளியிடும்படி செய்வதே இந்த முறையின் வழியாகும். உடம்பையும் சிந்தனையையும் கட்டுப்பாடு செய்யாமல் தளர்வாக விட்டிருக்கும் நிலையில் அவர் மனத்திலிருந்து வெளியாகும் வார்த்தைகளைக் கொண்டு அடிமனக் கோளாறுகளைக் கண்டு பிடிக்கலாம் என்பது பிராய்டின்

கருத்து. அடிமனத்தை அறிந்துகொள்வதற்கு இம்முறை முக்கியமானதோர் வழியைக் காட்டுகிறது.

மேலே கூறியவாறு கனவுப் பாகுபாட்டுமுறை, தடையிலாத் தொடர் முறை ஆகிய இவை இரண்டிலுமே பிராய்டு முக்கிய கவனம் செலுத்தினர். ஆனால் இவற்றோடு நோயாளியின் நடத்தையையும் முக்கியமாகக் கவனிக்க வேண்டும் என்று ஆட்லர் கூறுகிறார். சிறு வயதிலிருந்து அவன் நடந்துவந்த விதமும், இப்பொழுது அவன் நடந்து கொள்ளும் விதமும் அவனுடைய மனக்கோளாறுகளைக் கண்டறியச் சிறப்பாக உதவுகின்றன என்பது அவர் கருத்து.

ஆட்லரின் கொள்கைப்படி ஒவ்வொரு மனிதனும் அவனுக்கே தனிப்பட அமைந்த ஒரு 'வாழ்க்கை நடை'யின்படி வாழ்கிறான். பிறரைக் காட்டிலும் ஏதாவது ஒரு வகையில் உயர்வடைய வேண்டும் என்ற நோக்கமே இந்த வாழ்க்கை நடையின் முக்கியமான அம்சமாக இருக்கிறது. அவன் விரும்பும் உயர்வு உண்மையானதாக இருக்கலாம், அல்லது வெறுங் கற்பனையானதாகவுமிருக்கலாம். அவனுடைய நடத்தையெல்லாம் இந்த உயர்வு நோக்கத்தையடைவதையே குறியாகக் கொண்டு அமைந்திருக்கும்.

இவ்வாறு ஒவ்வொருவனும் தனது தகுதியை நிலைநாட்டித் தாழ்வு நிலையை விலக்கவும் உயர்வு நிலையை அடையவும் முயல்கிறான்.

தனது தகுதியை நிலைநாட்டவேண்டுமென்ற தன்மை மனித இயல்பிலே கூடவே பிறந்ததல்லவென்றும், தன்னிடத்திலே ஏதோ ஒரு குறை இருப்பதாகத் தோன்றும் ஓர் ஆழ்ந்த உணர்ச்சியின் காரணமாகவே அது பிறக்கிறது என்றும் ஆட்லர் கூறுகிறார். குறை இருப்பதாகத்

தோன்றும் அந்த உணர்ச்சிதான் **தாழ்வுணர்ச்சி** என்ற பெயரால் குறிக்கப்படுகிறது. இந்தத் தாழ்வுணர்ச்சியின் காரணமாக அடிமனத்தில் ஏற்படும் சிக்கல்தான் **தாழ்வு மனக்கோட்டம்** எனப்படும். இதைப் பற்றிப் பின்னல் விரிவாகப் பார்ப்போம்.

மனிதன் பிறக்கும்போது ஒருவிதமான சக்தியும் அவனுக்கில்லை. கோழிக் குஞ்சு முட்டையிலிருந்து வெளியே வந்ததும் தானகவே நடக்கிறது. தாய்ப் பறவை காட்டும் தீனியைக் கொத்தித் தின்கிறது. மீன் குஞ்சு முட்டையைவிட்டு வந்ததும் நீந்துகிறது; தனக்கு வேண்டிய உணவைத் தானே தேடிக்கொள்கிறது; தன்னைக் காத்துக் கொள்ள முயல்கிறது. மாட்டுக் கன்று பிறந்தவுடனே தாயின் பால் சுரக்கும் மடியை நாடிச் சென்று பாலருந்துவதற்கு வேண்டிய எழுந்து நடக்கும் சக்தியைப் பெற்றிருக்கிறது. மனிதக் குழந்தைக்கு அந்தச் சக்தி கூடக் கிடையாது. தாய்ப்பாலருந்தும் நிலையைத் தாண்டிய பிறகு மனிதக் குழந்தை உலகத்தில் பிறப்பதுதான் சரியான பருவமாகும் என்று உயிரியல் நிபுணர்கள் கூறுகிறார்கள். அந்த நிலையை அடைவதற்குப் பல மாதங்களுக்கு முன்பே பிறந்து விடுவதால்தான் மனிதக் குழந்தை ஒரு விதமான சக்தியுமில்லாமல் பிறருடைய உதவியையே எதிர் பார்த்திருக்கும் நிலையிலிருக்கிறது.

நிலைமை இவ்வாறிருப்பதால் மனித இனம் அழியாது நிற்பதற்கு மக்கள் ஒன்றுகூடிச் சமூகமாக வாழவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அனுபவத்தின் மூலமாக இந்த உண்மை நன்கு புலப்பட்டது; சேர்ந்து வாழ்ந்ததால் மக்களினத்தின் பலம் அதிகரித்தது; அதனல் மக்களினம் பெருகவும் வழியேற்பட்டது. கொடிய விலங்குகளிடத்

திலிருந்தும் வேறு இயற்கைத் துன்பங்களிலிருந்தும் மனித இனம் தன்னைக் காத்துக்கொள்ளவும் சிறந்த வழி யேற்பட்டது. இங்கு ஒரு விஷயத்தை நாம் தெரிந்து கொள்ளவேண்டும். சமூகம் என்பதை ஆட்லர் மக்கட் கூட்டம் என்ற பெயரால் குறிப்பிடுகிறார். இந்த மக்கட் கூட்டந்தான் பிரதானமானது என்றும் அவர் கூறுகிறார். ஆனால் அவர் அவ்வாறு கூறும்போது மக்கட் கூட்டம் என்பதற்கு அரசியலிலே சில நாடுகளில் வழங்கும் பொருளைத் தருவதில்லை. "மக்கட் கூட்டம் என்று குறிப்பிடும் போது நான் இன்றைய சமூகத்தை மனத்தில் வைத்துக் கொள்ளுவதில்லை; மத சம்பந்தமாக ஒன்று சேர்ந்த ஒரு மக்கள் தொகுதியையோ அல்லது அரசியல் சம்பந்தமாக ஒன்று சேர்ந்த ஒரு மக்கள் தொகுதியையோ நான் எண்ணுவதில்லை. நான் நினைக்கும் இலட்சிய மக்கட் கூட்டத்தில் மக்களினம் அனைத்தும் அடங்கியிருக்கும்; அதுவே பரிணாமத்தின் கடைசி வளர்ச்சி நிலையாகவு மிருக்கும்" என்று ஆட்லர் கூறுகிறார்.

இவ்விதமான மக்கட்கூட்டத்தின் ஒருமைப்பாட்டிலே ஒவ்வொரு தனி மனிதனுக்கும் இயல்பாகவே ஆர்வமிருக்கிறது என்பது ஆட்லர் கொள்கை. அவனுக்குள்ளே மக்கட் கூட்டத்தின் ஒருமையைப் பேணும் ஒரு வலிமையான உந்தல் இருக்கிறது. இந்த வகையில் அவன் பிறருடைய நலத்தைப் பேணும் இயல்பு உள்ளவனாகிறான். உளவியல் அறிஞர்களிற் பலர் கருதுவதுபோல மனிதன் தன்னலமே பேணுகிறவன் என்பதை ஆட்லர் ஏற்றுக் கொள்ளுவதில்லை.

ஆனால் மனிதன் தன்னிடமுள்ள குறைபாட்டை உணர ஆரம்பிக்கும்போது, மக்கட் கூட்டத்தின் ஒருமைப்

பாட்டைப் பேணும் அவனுடைய ஆர்வத்தை இந்தக் குறைபாட்டுணர்ச்சி குலைக்க முயல்கிறது. குறைகளால் அவனுடைய தன் மதிப்புக் குறைகிறது; அதனால் ஒருமைப் பாட்டினுள்ள ஆர்வமும் தளர்கிறது. இதன் காரண மாகவே மனிதன் நேர்மையான வழியை விட்டுத் தவறி நடக்கத் தொடங்குகிறான்.

நரம்புக் கோளாறுகள், மனநோய்கள் முதலியனவும் குற்றம் புரியும் தன்மையும் இதனால் ஏற்படுகின்றன. குறைகளால் ஏற்பட்ட தாழ்வுணர்ச்சியின் காரணமாக ஆண்பெண்ணுறவான இணைவிழைச்சு நடத்தையிலும் தவறி நடக்கிறார்கள்; சிலர் கலைத்திறமைகளின் மூலமாக மக்கட் கூட்டத்தின் மதிப்பைப் பெற்றுத் தமது உயர்வை நிலைநாட்ட முயலலாம். ஆனால் இது எவ்வளவு தூரம் வெற்றிகரமாக நடைபெறும் என்பதை நிச்சயமாகச் சொல்ல முடியாது என்று ஆட்லர் கூறுகிறார்.

ஆட்லரின் கருத்தையொட்டி இங்கு சுருக்கமாகக் கூறிய விஷயங்களை இன்னும் சற்று விரிவாகப் பின்வரும் பகுதிகளிலே காண்போம்.

## 4

# குழந்தையின் கலக்கம்

பிறந்தவுடனே குழந்தை அழுகிறது. "குழந்தை நன்றாக அழுகிறது; அதனால் ஆரோக்கியத்தோடு பிறந்திருக்கிறது" என்று எண்ணி எல்லோரும் மகிழ்ச்சியடைகிறார்கள்.

குழந்தை பிறந்தவுடனே அழுவதற்கு வெவ்வேறு காரணங்கள் கூறுவார்கள். தாயின் கருப்பையிலே இருக்கும் வரை குழந்தை சுவாசிப்பதில்லை; உலகத்தில் வந்ததும் அது சுவாசிக்கத் தொடங்குகிறது. அதனுடைய சுவாசப் பை அது முதல்தான் வேலை செய்யத்தொடங்குகிறது. சுவாசப் பைக்குள் முதன் முதலாக மூச்சுச் சென்று வெளியில் வருவதால் ஏற்படும் சப்தமே குழந்தையின் முதல் அழுகை என்று வைத்திய நிபுணர்கள் கூறுவார்கள்.

கருப்பையில் இருக்கும் வரை குழந்தை தேவர்களோடு உறவாடி மகிழ்ந்து கொண்டிருந்தது. திடீரென்று உலகத்திற்கு வந்ததும் அந்த உயர்ந்த இன்பம் போய் விட்டதே என்று குழந்தை அலறுவதாகப் பாட்டி சொல்லுவாள்; நவீனப் படிப்புள்ளவர்கள் அப்படிச் சொல்ல மாட்டார்கள். கிராம மக்கள் பெரும்பாலும் அதை நம்புவார்கள்.

அதை மூட நம்பிக்கை என்று நாம் நினைக்கிறோமல்லவா? இருந்தாலும் அதில் ஏதோ கொஞ்சம் உண்மையிருக்கிறதாக இன்று உளவியல் அறிஞர்கள் கருதுகிறார்கள்

தாயின் கருப்பையில் இருந்தபோது குழந்தைக்கு ஒரு துன்பமுமில்லை; துன்பங்களுக்குக் காரணமான ஆசைகளுமில்லை; பூரண இன்பந்தான் அங்கே நிலவியிருந்தது. அது குழந்தைக்குச் சொர்க்கம் போலிருந்தது. அந்தக் கருப்பையிலேயே மறுபடியும் தங்கவேண்டுமென்று குழந்தை விரும்புகிறதாம். துன்பங் கலவாத இன்ப உலகமாக அது குழந்தைக்கு இருந்ததல்லவா? அதற்கே செல்ல வேண்டுமென்ற ஆசையால் குழந்தையின் மனத்திலே ஒரு சிக்கல் ஏற்படுகிறதென்று கூறுவதோடு அதற்கு 'நிர்வாண மனக்கோட்டம்' என்ற பெயரையும் சில உளவியல் அறிஞர்கள் சூட்டியிருக்கிறார்கள்.

இந்தக் கருத்தை முற்றிலும் ஒப்புக்கொள்ளாதவர்கள் கூட ஒரு விஷயத்தை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். அதாவது குழந்தை உலகத்திற்கு வருகிறபோது தன்னைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்கு ஒரு விதமான சக்தியும் பெற்றிருப்பதில்லை. கருப்பையிலிருந்த நிலையைவிட இது மிகவும் தாழ்வான நிலைதான். குழந்தையை இப்பொழுது குளிரும் வெப்பமும் தாக்குகின்றன; பசி முக்கியமாகத் தாக்குகிறது.

குழந்தைக்கு இப்பொழுது எத்தனையோ துன்ப உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. மூன்று மாதமான குழந்தையையே எடுத்துக் கொள்வோம். தொட்டிலிலே சௌகரியமாக அது படுத்துத்தான் இருக்கிறது. இருந்தாலும் அதற்கு அதைச் சுற்றியுள்ளதெல்லாம் ஒரே மர்மமாக இருக்கிறது; அதற்கு ஒன்றுமே விளங்குவதில்லை. திடீரென்று மேலே போர்த்திருந்த வெள்ளைத் துணி சற்று அதிகமாகக் கால்களிலே சுற்றிக் கொள்ளுகிறது. கால்களின் மென்மையான பாகங்களிலே அது உறுத்தி அதிக

மாகச் சூடுண்டாக்குகிறது. குழந்தைக்கு அந்தத் துன்பத்தைத் தானாகவே போக்கிக்கொள்ள முடிவதில்லை. காலை ஆட்டுகிறது; கையை ஆட்டுகிறது. துணி இன்னும் நன்றாகச் சுற்றிக்கொள்கிறது. கடைசியிலே துன்பம் தாங்காமல் குழந்தை அழத் தொடங்குகிறது. குழந்தையால் துணியைக்கூடச் சரிப்படுத்த முடிவதில்லை.

தாய் வருகிறாள். குழந்தைக்குப் புரியாத வார்த்தைகளையெல்லாம் சொல்லுகிறாள். குழந்தையைத் தனது கைகளிலே தூக்கிக் கொள்ளுகிறாள். மார்போடு அணைத்துக் கொள்ளுகிறாள்.

இப்பொழுது அந்தத் துன்ப நிலை மாறுகிறது. மறுபடியும் எல்லாம் சௌகரியமாகக் குழந்தைக்குத் தோன்றுகிறது.

தன்னால் முடியாததை அந்தத் தாய் செய்கிறாள் என்று குழந்தைக்குத் தெரியத்தானே செய்யும்? கொஞ்சங் கொஞ்சமாக அந்த உணர்ச்சி வராமல் போகுமா? ஆகவே குழந்தைக்கு அதன் சக்தியற்ற நிலைமையால் ஒருவகைத் தாழ்வுணர்ச்சி மெதுவாக ஏற்படுகிறது.

மனிதனுக்கு ஏற்படும் முதல் தாழ்வுணர்ச்சி இதுவே யாகும். இதைத் தவிர்க்க முடியுமா? இந்தத் தாழ்வுணர்ச்சி ஏற்படாமலே இருக்குமாறு செய்ய வழியுண்டா? அப்படி ஒரு வழி இருப்பதாகத் தோன்றவில்லை. ஆனால் இந்தத் தாழ்வுணர்ச்சியைச் சீக்கிரத்திலே போக்க முடியும் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

இந்தத் தாழ்வுணர்ச்சியைப் பற்றி மனிதன் எண்ணிப் பார்ப்பதே இல்லை. அப்படி எண்ணிப் பார்த்திருந்தால்

அதைப் போக்குவதற்கான கல்வி முறையை இதற்குள் அவன் வகுத்திருப்பான்.

இங்கு கல்வி முறை என்று கூறும்போது பள்ளியில் கிடைக்கும் கல்வியை மட்டும் நான் குறிப்பிடவில்லை. பள்ளிக்குச் செல்லும் பருவத்திற்கு முன்பே வீட்டில் குழந்தைக்குக் கிடைக்கும் வாழ்க்கைக் கல்வியையும் இதில் சேர்த்துக்கொள்ளவேண்டும். இதை வாழ்க்கைப் பயிற்சி என்று கூறலாம்.

பிறந்தவுடனே குழந்தையின் உறுப்புக்கள் அனைத்தும் அவற்றிற்கு உண்டான வேலையைச் சரியானவாறு செய்யும் சக்தியைப் பெற்றிருப்பதில்லை. குழந்தை பல விஷயங் களுக்குப் பிறரை எதிர்பார்த்திருக்க வேண்டியுள்ளது. அது தானாகப் பல காரியங்களைத் தீர்மானித்துச் செய்ய முடிவதில்லை. இவற்றால் எல்லாம் குழந்தைக்குத் தனது குறைபாடுகளைப் பற்றிய தாழ்வுணர்ச்சி பிறக்கின்றது என்று கண்டோம் அல்லவா? இந்தத் தாழ்வுணர்ச்சியே குழந் தையைப் பலவிதமான முயற்சிகளுக்கும், செயல்களுக்கும் தூண்டுகிறது. குழந்தை சதா ஏதாவது செய்துகொண்டே இருக்கும். விஷமம் பண்ணும். மற்றக் குழந்தைகளோடு சண்டை போட்டுப் பார்க்கும். இவையெல்லாம் அந்தத் தாழ்வுணர்ச்சியின் விளைவாகவே ஏற்படுகின்றன என்று ஆட்லர் கூறுகிறார். இந்த உணர்ச்சியிலேயே அக்குழந் தைக்குத் தக்க கல்வியை அளிக்கும் வாய்ப்பும் அடங்கி யிருக்கிறது. ஆனால் அதைச் சரியான முறையில் பயன் படுத்த உதவ வேண்டும்.

குழந்தைகள் பல விதமான செயல்களில் ஈடுபடும் போது தாய் தந்தையர் அவற்றிற்கு உற்சாகமளிக்கவேண் டும். "உன்னால் அதைச் செய்ய முடியாது; செய்யாதே"

என்றிவ்வாறு கூறிக் குழந்தையைத் தடுப்பதால் அதன் தாழ்வுணர்ச்சி மேலும் அதிகரிக்கும்.

பள்ளியில் பாடங் கற்பிக்கும் ஆசிரியரும் இதை நன்கு உணர்ந்திருக்கவேண்டும். பல உண்மைகளைக் குழந்தையே கண்டு தெரிந்துகொள்ள ஆசிரியர் உதவுவது தான் சரியான கல்வி முறை. அவ்வாறு செய்வதால் குழந்தைக்குத் தன்னிடத்திலேயே நம்பிக்கையும் தைரிய மும் உண்டாகும். ஆசிரியர் தாமே எல்லாவற்றையும் சொல்லிக்கொடுக்க முயலும்போது இந்த நன்மை ஏற்படுவ தில்லை. குழந்தையின் தாழ்வுணர்ச்சியும் அதிகமாகிறது.

பெற்றோர்களும் மற்றவர்களும் பல சமயங்களிலே குழந்தையைத் தங்கள் விளையாட்டுப் பொம்மையாக நினைத்துவிடுகிறார்கள். குழந்தையைத் தூக்கி வேகமாக இங்கும் அங்கும் வீசி ஆட்டங் காட்டுகிறார்கள். அது பெரியவர்களுக்குச் சாதாரணமாகத் தோன்றும்; ஆனால் குழந்தைக்கு அது பயங்கர உணர்ச்சியைக் கொடுக்கும். மேலும் கீழும் வேகமாகப் போவதில் குழந்தை பயப்படு கிறது. சிடுசிடு வென்று பேசினாலோ, வெறுப்போடு பார்த்தாலோ குழந்தை பெரிதும் துன்புறுகிறது. இவை யெல்லாம் குழந்தையின் தாழ்வுணர்ச்சியை ஓங்கச் செய்கின்றன. வேடிக்கையாகக்கூட அவ்வாறு செய்வது சரியல்ல.

இவ்வாறு தாழ்வுணர்ச்சி ஓங்குவதோடு குழந்தை யின் தன்மதிப்பும் குறைகிறது. இந்த நிலையிலே குழந்தை தனது அழுகையிலே ஒரு புதிய சக்தியைக் காணத் தொடங்கும். முதலில் ஏதோ ஓர் துன்பத்தைத் தெரி விக்கவோ அல்லது தொண்டையிலுள்ள குரல் எழுப்ப உதவும் தசை நாண்களுக்குப் பயிற்சி கொடுக்கவோ

குழந்தை அழுகிறது. பசி வந்தால் அழுகிறது. இவ்வாறு ஏதாவதொரு காரணத்தால் அழுதவுடனே தாய் தன்னை நோக்கி வருவதை அது மெதுவாகக் காண்கிறது. பிறகு தாயையும் மற்றவர்களையும் தன்னிடம் வரவழைப்பதற்கும் தன்னை எடுத்துக் கொஞ்சும்படி செய்வதற்கும் அழுகை என்னும் அந்தச் சக்தி உபயோகப்படுகிறது என்று தெரிந்து கொண்டு அதைப் பயன்படுத்தத் தொடங்குகிறது. இந்தச் சக்தியைத் தெரிந்துகொண்டவுடனே குழந்தையின் தன் மதிப்பு அதிகரிக்கிறது. இந்த அழுகை என்னும் சக்தியை அடிக்கடி பயன்படுத்தத் தொடங்குகிறது. குழந்தைக்கும் அதன் தன்மதிப்பை உயர்த்திக்கொள்ள ஆசையிருக்கிறதாம்.

குழந்தை அழுதவுடனே அதை எடுத்து ஆறுதல் செய்யப் போவதால் அதன் விருப்பத்தை நிறைவேற்றியதாகும். ஆனால் இவ்வாறு செய்வதால் குழந்தையின் இயல்பு கெட்டுப் போகிறது. இது விரும்பத் தக்கதல்ல. ஆனால் அழுதால் அழுதுகொண்டிருக்கட்டும் என்று கவனிக்காமல் விடுவதால் வேறொரு விதமான தீமை ஏற்படுகிறது. குழந்தைக்குத் துன்பமும், தன்னைப் பற்றிய தாழ்வுணர்ச்சியும் அதிகரிக்கின்றன. இந்த இரண்டு தீமைகளையும் சீர்தூக்கிப் பார்க்கும்போது பின்னதைத் தடுப்பதைவிட முன்னதைத் தடுப்பதே நல்லதென்று தோன்றும். எல்லோரும் தன்னைக் கவனிக்கவேண்டும், தனது விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும் என்று எதிர்பார்க்கும் நிலையிலேயே குழந்தை வளர்ந்தால் அதன் பிற்கால வாழ்க்கை அதனால் பாதிக்கப்படும். ஆனால் குழந்தை அழுகின்றபோது அதைக் கொஞ்ச நேரத்திற்காவது அப்படியே கவனிக்காமல் விட்டுவிட்டால் இந்த மாதிரி துன்

பங்களையும் ஏமாற்றங்களையும் பொறுத்துக்கொள்ளவாவது அது பழகிக்கொள்ளும்.

பொதுவாகப் பார்த்தால் மேலே கூறிய இரண்டு நிலைமைகளும் ஏற்படாதவாறு ஆரம்பத்திலேயே எச்சரிக்கையாக இருப்பதுதான் பெரிதும் சிறப்பு என்று தெரியும். சிரமமான காரியந்தான். இருந்தாலும் பெற்றோரும் மற்றவர்களும் அதைத் தெரிந்துகொள்ளத்தான் வேண்டும்.

குழந்தையை ஆரம்பத்திலிருந்தே ஒரு தனித் தன்மை வாய்ந்த ஜீவனென்று கருதவேண்டும். அதன் தன் மதிப்புக்குப் பங்கம் வராமல் நாம் அதனிடம் நடந்துகொள்ளவேண்டும். நம் வீட்டிற்கு வருகிற விருந்தினருக்கு நாம் ஏற்ற மரியாதையும் அன்பும் காட்டுகிறோமல்லவா? அந்தச் சமயத்தில் உள்ள மனப்பான்மையைப் போல, ஏற்ற மரியாதையோடு குழந்தையைப் பேணவேண்டும். தாய்ப்பால் அருந்தும்போது குழந்தையை வெடுக்கென்று பிரித்தல், கோபப் பார்வை காட்டுதல், மிரட்டுதல் முதலான வகைகளில் அதை அலட்சியப்படுத்துதலும் தவறு; அதேபோலக் குழந்தையிடம் அளவு கடந்த அன்பு காட்டுதலும், கொஞ்சுதலும், முத்தம் இடுதலுமான செயல்களும் தவறாகும்.

குழந்தை வளர வளரப் பல வேறு நிலைமைகளில் தனது வலிமைக் குறைவை உணரத் தொடங்குகிறது. தவழ்ந்து விளையாடும் குழந்தை எழுந்து நடக்கக் கற்றுக் கொள்வது ஒரு பெரிய முயற்சி. உடம்பின் பல வேறு உறுப்புக்கள் செய்யும் வேலைகளைத் தனது ஆதிக்கத்திற்குள் வைத்துக்கொள்ளக் குழந்தை கற்றுக்கொள்ளுவதும் ஒரு பெரிய முயற்சி. இப்படிப் பல நிலைமைகளிலே குழந்தைக்குத் தக்க உற்சாகமும், நம்பிக்கையும் அளிக்கவேண்டும்.

அதிகமாகச் செல்லங்கொடுத்து வளர்ப்பதிலே குழந்தைக்கு நன்மையில்லை. எப்பொழுதும் கொஞ்சுவதும், குழந்தையையே கவனித்துக்கொண்டிருப்பதும், வரம்பு கடந்த அன்பு காட்டுவதும் மேலும் மேலும் அவற்றிலேயே ஆசையைக் குழந்தைக்கு உண்டாக்கும். அதன் விளைவாக அதன் தாழ்மையுணர்ச்சி அதிகரிக்கவும் செய்யும். அதன் தன்னம்பிக்கை வளரவும், குழந்தை கொஞ்சங் கொஞ்சமாகத் தானே தனக்கு வேண்டிய பல விஷயங்களைக் கவனித்துக்கொள்ளவும் நாம் உதவ வேண்டும்.

பொதுவாகப் பார்த்தால் குழந்தை ஒவ்வொன்றும் முதிர்ந்த மனிதனைவிடப் பல வகைகளில் சக்தி குறைந்தது தான். பல காரியங்களை அதனுல் பெரியவர்களைப் போலச் செய்ய முடியாது. ஆகையால் ஓரளவு குறைபாட்டுணர்ச்சி எல்லாக் குழந்தைகளுக்கும் இருப்பது இயல்புதான். அந்த உணர்ச்சி மிகுந்துவிடக்கூடாது. அவ்வாறு மிகாமல் பார்த்துக் கொள்வதில் பெற்ருேர்களும், ஆசிரியர்களும், மற்றவர்களும் கவனம் செலுத்தவேண்டும்.

அந்த உணர்ச்சி மிகும்போதுதான் தாழ்வு மனக் கோட்டம் உண்டாகிறது. அதை ஈடு செய்வதற்காக ஒரு கற்பனையான உயர்வு மனக்கோட்டமும் பிறக்கின்றது. மனிதனுக்குத் தன்னை மற்றவர்கள் உயர்வாக மதிக்க வேண்டுமென்ற உயர்வுந்தல் அல்லது வேகம் இருக்கிறதென்று ஆட்லர் கூறுகிருரல்லவா? அந்த உயர்வுந்தலால் தூண்டப்பட்டு அவன் உண்மையிலேயே ஏதாவது ஒரு வகையில் உயர்வடைந்தால் அது போற்றத் தகுந்ததுதான். ஆனல் அவ்வாறில்லாமல் தனக்கு ஓர் உயர்விருப்பதாக வெறுங் கற்பனை செய்துகொள்வதில் யாதொரு பயனுமில்லையல்லவா?

# 5

# குடும்பமும் குழந்தையும்

குடும்பத்திலே முதற் குழந்தை பிறக்கிறது. எல்லோருக்கும் ஒரே மகிழ்ச்சி. அந்தக் குழந்தையும் ஆணுக இருந்துவிட்டால் இன்னும் அதிக மகிழ்ச்சி. அந்தக் குழந்தைக்குச் செல்லம் அதிகம்; செல்லம் அளவு கடந்தே போய்விடும். அது அந்தக் குழந்தைக்குத் தீங்கு விளைவிப்பதாகும். குழந்தை அன்பிலும் ஆதரவிலும் வளர வேண்டியதுதான். இருந்தாலும் அவற்றிற்கெல்லாம் ஒரு வரம்புண்டு. வரம்பை மீறுவதால் தாழ்வுணர்ச்சி ஏற்படுவதற்குப் பெற்ருேர்களே காரணமாகிருர்கள் என்று முன்பே அறிந்து கொண்டோம்.

இரண்டாவது குழந்தை பிறக்கும்போது, அதிலும் அந்தக் குழந்தை சீக்கிரமே பிறந்துவிட்டால் அது முதற் குழந்தைக்கு ஒரு சோதனை காலமாகிவிடுகிறது. தாயின் அன்பை முக்கியமாகக் கவருவதற்கு வேருெரு குழந்தை வந்துவிட்டதை மூத்த குழந்தை உணர்கிறது. அதிலும் அளவு கடந்து செல்லத்தோடு வளர்ந்த குழந்தை மிக நன்ருக உணர்கிறது. இந்த உணர்ச்சியை ஓங்க விடாமல் தடுக்கும் முறையில் பெற்ருேர்கள் நடந்துகொள்ள வேண்டும்; இல்லாவிட்டால் மூத்த குழந்தைக்கு இப்பொழுதுண்டாகும் ஏக்கமும், அதன் விளைவுகளும் அதன் வாழ்க்கை முழுவதையும் பாதிப்பதாக அமைந்துவிடும். விஷயம் அறிந்த தாய் மூத்த குழந்தை அருகிலிருக்கும்போது இரண்டாம் குழந்தையை மார்பில் அணைத்துப் பால்

கொடுக்கமாட்டாள். மூத்த குழந்தை அதைப் பார்த்தால் ஏங்கிப் போகும் என்று சொல்லுவாள். எனக்குத் தெரிந்த ஒரு குழந்தை வெகுநாள் வரையிலும் அதன் தங்கையைக் குப்பைத் தொட்டியில் போட்டுவிடும்படி கூறிக்கொண்டே இருந்தது.

சில மூத்த குழந்தைகள் இவ்வாறு ஏங்கினுலும் தம்பி தங்கைகளின் மேல் ஆதிக்கம் செலுத்தும் மனப்பான்மை யுடையவர்களாக இருப்பார்கள். வயதில் மூத்தவர்களல்லவா? சின்னக் குழந்தைகளுக்கில்லாத சில அனுகூலங்கள் இவற்றிற்குண்டு. அவற்றைப் பயன்படுத்திச் சிறியவர்களை அடக்கி நடத்தும் தன்மை சிலருக்கு இருக்கிறது. அப்படிப்பட்டவர்கள் பிற்கால வாழ்க்கையிலே மற்றவர்களின்மேல் அதிகாரம் செலுத்தும் தன்மை பெறுகிறார்கள். மேலதிகாரம் வகிப்பதற்கு இவர்கள் நல்ல தகுதி காட்டுவார்கள்.

இரண்டாவது குழந்தைக்கு வேறொரு விதமான தொல்லை யேற்படுகிறது. அது பெற்றோரை எதிர்பார்த்து நிற்கவேண்டியிருப்பதோடு மூத்த குழந்தையையும் எதிர்பார்த்து நிற்கவேண்டியிருக்கிறது.

“இரண்டாம் குழந்தை தனது உயர்வை நிலைநாட்டுவதற்கு எப்பொழுதும் முயன்று கொண்டிருக்கிறது. வேறொரு குழந்தை தனக்கு முன்பாகவே தன்னைக் காட்டிலும் சக்தி பெற்றிருப்பது இந்தக் குழந்தைக்குப் பெரிய தூண்டுகோலாக இருக்கிறது. அதற்கு அப்பொழுதே போட்டி மனப்பான்மை வந்துவிடுகிறது. அதற்கு ஆதரவு கிடைத்தால், அது மூத்த குழந்தையையும் பின்னுக்குத் தள்ளிவிட்டு முன்னால் சென்றுவிடும். மூத்த குழந்தை தனது வலிமையையே நம்பிக்கொண்டு இளைய குழந்தை

தன்னைத் தோற்கடிக்கச் செய்யும் நிலைமையேற்படும் வரை வேகம் கொள்ளாதிருந்துவிடும்'' என்று ஆட்லர் கூறுகிறார்.

"மூத்தது மோழை; இளையது காளை" என்ற தமிழ்ப் பழமொழி இந்த உண்மையை அனுபவத்திலே கண்டுதான் எழுந்திருக்கிறது என்று தோன்றுகிறது.

பல குழந்தைகளுள்ள ஒரு குடும்பத்திலே தோன்றும் கடைசிக் குழந்தைக்கும் தனிப்பட்ட சில சங்கடங்களும் பிரச்சினைகளும் ஏற்படுகின்றன. மற்றவர்கள் அந்தக் குழந்தையை எப்பொழுதும் சிறு குழந்தையாகவே பாவிக்கிறார்கள். அதனிடத்திலே பொறுப்பான காரியங்களை விடுவதில்லை. ஆலோசித்துத் தீர்மானம் செய்ய வேண்டிய விஷயங்களிலும் அதை அசட்டை செய்து விடுகிறார்கள். "அவனுக்கென்ன தெரியும், சிறு குழந்தை" என்று பேசி விடுகிறார்கள்.

இது அக்குழந்தையின் உள்ளத்திலே நன்கு பதிகிறது. எல்லோரையும்விடச் சிறப்புற்று விளங்க வேண்டும் என்ற வேகம் அதன் உள்ளத்திலே குமுறுகிறது. அதற்கு வேண்டிய முயற்சியிலே அக்குழந்தை நாட்டம் செலுத்தலாம்.

ஆனால் எல்லாக் குழந்தைகளும் அவ்வாறு உயர்வை நாடுகின்றனவா என்றால் அதுவுமில்லை. அந்த முயற்சி செய்யாமல் சில குழந்தைகள் பின்வாங்கி ஏதாவது ஒரு சாக்குக் கண்டுபிடித்துத் தன் கடமையினின்றும் தப்பித்துக்கொள்ளப் பார்க்கின்றன. வாழ்க்கைப் பிரச்சினைகளை நேராக எதிர்த்து நில்லாமல் எப்படியாவது அதிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள வழி தேடும்.

ஒரே குழந்தை மட்டும் உள்ள குடும்பங்களில் வேறு விதமான பிரச்சினைகள் தோன்றுகின்றன. அந்தக் குழந்

தைக்குச் செல்லம் கொடுப்பது அளவு கடந்துவிடும். அதற்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் மற்றவர்கள் கவனித்துக்கொள்ளத் தயாராக இருப்பார்கள். இந்த நிலையிலே அந்தக் குழந்தைக்குத் தன்னம்பிக்கை பிறப்பது அரிது. எதற்கும் பிறரை எதிர்பார்க்கும் இயல்பும், எல்லோரும் தன்னிடம் அன்பு காட்டவேண்டுமென்ற ஆவலும் அதனிடம் தோன்றுகின்றன. பொறுப்பேற்றுத் தடைகளையெல்லாம் எதிர்த்து நின்று காரியம் செய்யும் பண்பு அதனிடம் தோன்றுது போய்விடும்; பிறரோடு பழகுவதிலும் அது விரும்பத்தக்க முறையில் நடக்காது. மற்றவர்கள் தன்னை அதிகமாகக் கவனிக்க வேண்டும் என்றே எதிர்பார்க்கும்.

ஒரே குழந்தையுள்ள குடும்பத்தில் தோன்றும் இதே தீமைகள் வேறு சில குழந்தைகளுக்கும் ஏற்படலாம். ஒரு குடும்பத்தில் பல குழந்தைகளிருந்தாலும் ஆண் குழந்தை ஒன்றுதானிருக்கும்; அல்லது பெண் குழந்தை ஒன்றுதானிருக்கும். அதற்கும் இந்தப் பிரச்சினைகள் தோன்றலாம். ஏனென்றுல் அதனிடத்தில் பெற்றோர்களும் மற்றவர்களும் விசேஷ அன்பு காட்டத் தொடங்குவார்கள்.

இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்து குழந்தையிடம் பெற்றோர்கள் சரியான சமநிலையில் நடந்து வருவார்களானால் அது குழந்தைக்குப் பெரிதும் நன்மை விளைவித்ததாகும். அது தான் குழந்தையை வளர்க்கும் சரியான முறையுமாகும்.

மேலும் தினசரி வாழ்க்கை முறையில் திடீரென்று மாறுதல் ஏற்பட்டால் அதுவும் குழந்தையைப் பாதிக்

கிறது; அதனால் தாழ்வுணர்ச்சி ஏற்படுகிறது. குழந்தைக்குத் தம்பியோ தங்கையோ பிறப்பது ஒரு பெரிய சோதனைக் காலம் என்று முன்னரே குறிப்பிட்டேன். அதே போலக் குடும்பத்தில் யாராவது இறக்க நேரிட்டாலும் அது குழந்தையைப் பாதிக்கிறது. புதிய வேலைக்காரன் வீட்டிற்கு வருதல், குடும்பத்தை ஓரிடம் விட்டு வேரிடத்திற்கு மாற்றுதல், படிக்கும் பள்ளிக்கூடத்தை மாற்றுதல் என்று இப்படி ஏற்படும் மாறுதல்கள் குழந்தைக்கு அனுகூலமாகவோ அல்லது பிரதிகூலமாகவோ ஏற்படுகின்றன. இம்மாதிரியான நிலைமைகளில் பெற்றோர்கள் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

# 6

# தன் மதிப்பு

குழந்தை நாற்காலிமீது ஏறும்; அதிலிருந்து மேஜை மீது ஏறும். மேஜைமீது நின்றுகொண்டு, "பார்த்தாயா, நான் எல்லோரையும் விட உயரம்" என்று மகிழ்ச்சியோடு சொல்லும். தான் உயர்ந்தவன் என்று சொல்லிக்கொள்வதிலே குழந்தைக்கு அத்தனை ஆசையிருக்கிறது.

இது ஒருவகையான தாழ்வுணர்ச்சியால் ஏற்பட்டிருக்கிறது. இதைப் போக்கிக்கொள்வதற்காக எழுந்த உயர்வுந்தல்தான் குழந்தையை மேஜையின் மேலேறி நிற்கும்படி தூண்டியிருக்கிறது!

இதை விட்டுவிட்டு வேறொரு வகையான மனநிலையைக் கவனிப்போம்.

நான் கல்லூரியிற் படித்துக்கொண்டிருந்த அந்தக் காலத்திலே பல மாணவர்களும் பெரியவர்களும் கூடத் தங்கள் பெயர்களை ஆங்கிலேயர் பெயர்களைப் போலத் தொனிக்கும்படி வைத்துக் கொள்வார்கள். மேல் நாட்டு இசையைப் பற்றி ஒன்றும் தெரியாவிட்டாலும் அதை அனுபவிப்பது போலப் பாவனை செய்வார்கள். அந்தக் காலத்திலே ஆங்கிலேயருடைய ஆதிக்கம் இங்கே பலமல்லவா?

எங்கள் கிராமப் பக்கத்திலே இன்றைக்குப் பார்த்தால் குழந்தைகளுக்குப் பெயர் வைக்கும்போது, நல்லப்பன், சொங்கப்பன், மயிலாத்தாள், கறுப்பாயி என்றெல்லாம்

முன்பு பெயர் வைத்தது போல் வைக்காமல் ராஜலக்ஷ்மணன், சுந்தரம் என்றும், சரோஜா, லலிதா என்றும் வைக்கத் தொடங்கியிருக்கிறார்கள். உள்நாட்டுக் கிராமங்களிலே இந்தப் பழக்கம் இன்னும் ஏற்படவில்லை. பட்டணப் புழக்கம் மிகுந்திருக்கும் கிராமங்களிலே, முக்கியமாக ஆங்கிலக் கல்வி கற்ற இளைஞர்களுள்ள குடும்பங்களில் இந்த மாதிரி உஷா, அஷோக் என்று பெயர் வைக்கும் மனப்பான்மை உண்டாகியிருக்கிறது. பட்டணங்களிலுள்ள படித்த மக்களிடத்திலே இந்த மனப்பான்மை நேர்மாறான முறையில் தனித்தமிழ்ப் பெயர் ஆசையாக வேலை செய்யத் தொடங்கியிருக்கிறது.

உளவியல் ரீதியில் இவற்றையெல்லாம் ஆராய்ந்தால் இவற்றின் அடியிலே மறைந்து கிடக்கும் தாழ்வுணர்ச்சியும் அதைக் போக்குவதற்குத் தோன்றிய உயர்வுந்தலும் வெளியாகும்.

ஒவ்வொரு மனிதனுக்கும் தன்னைப்பற்றிய ஒரு மதிப்புண்டு. இந்தத் தன் மதிப்பு இளமையிலிருந்து முதிர்ந்த பருவம் வரை வளர்ந்துகொண்டே வந்து, முதிர்ந்த பருவத்தில் ஒரு நிலையை அடைகிறது. முதுமை தோன்றித் தளர்ச்சியேற்படுங் காலத்தில்தான் இது கீழ்நோக்கத் தொடங்குகிறது. இந்தத் தன்மதிப்பிற்குப் பங்கம் வருவதை யாரும் விரும்பமாட்டார்கள்.

தற்கொலை செய்து கொள்ளுவதும் பெரும்பாலும் அடிப்படையிலே இந்தத் தன்மதிப்பின் காரணத்தாலேயேயாகும். தற்கொலை செய்துகொள்ளுபவன் கீழ்க்கண்ட மூன்று நோக்கங்களினால் அவ்வாறு செய்ய முயல்கிறான் என்று ஆட்லர் கூறுகிறார். 1. 'தான்' என்ற அகத்தினால் உந்தப்பட்டு அதை எல்லோரும் கவனிக்கும்படியாகச்

செய்யவேண்டுமென்ற விருப்பம். எல்லோருடைய உள்ளத்தையும் கவரும் ஒரு அதிர்ச்சி, ஒரு அவதூறு முதலியவற்றை உண்டாக்க வேண்டுமென்ற ஆவல்; 2. தனக்குப் பின்னால் வாழ்கின்ற தன் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், நண்பர்கள் ஆகியவர்கள் மனம் வருந்துமாறு செய்து அந்த வகையில் அவர்களைத் தண்டிக்கவேண்டுமென்ற ஆசை; 3. வீரச் செயல் என்ற மாறுவேடத்திலே வாழ்க்கைப் போராட்டத்தைச் சரியாக நேர் நின்று நடத்தாமல் கோழைத்தனமாக அதிலிருந்து விடுபட முயற்சி செய்தல். இவை மூன்றுந்தான் பெரும்பாலான தற்கொலைகளுக்குக் காரணம் என்று அவர் கூறுகிறார்.

மார்கரட் வான் ஆண்டிக்ஸ் என்ற மாது ஹங்கேரியைச் சேர்ந்த உளவியலறிஞர். தற்கொலை முயற்சி செய்த நூறு பேர்களை இவர் ஆராய்ந்தார். அவர்களிலே நாற்பத்தெட்டுப் பேர்கள் தங்கள் குழந்தைப் பருவத்திலே அன்பு என்பதையே அறிந்ததில்லையாம். அவர்கள் அனாதைகள்; அவர்கள் சட்டத்திற்கும் வழக்கத்திற்கும் உட்பட்ட முறையில் பிறந்தவர்களல்ல; அவர்கள் இளமைப் பருவம் துன்பம் நிறைந்ததென்று தெரிந்தது. மேலும் அந்த நூறுபேர்களில் ஒருவராவது ஏதாவது ஓர் அரசியல் கட்சியிலோ அல்லது சமூக சீர்திருத்த இயக்கம் முதலான கட்சிகளிலோ சேர்ந்திருக்கவில்லை. அவ்வாறு ஏதாவதொரு கட்சியில் சேர்ந்திருந்தால் அது ஒரு வகையான தன்மதிப்பைக் கொடுத்திருக்கும். அவர்களுக்கு நண்பர்களும் இருக்கவில்லை. மனிதனுக்குத் தான் மற்றவர்களுக்கு ஒரு வகையிலும் பயன்படவில்லை என்ற உணர்ச்சியும் தற்கொலைக்குக் காரணமாகின்றது. மாதந்தோறும் குறிப்பிட்ட சம்பளம் பெறுவோர் அதிகமாகத் தற்கொலை மனப்

பான்மை கொள்ளுவதில்லை. ஆனால் தங்களுடைய வரு வாய் உயர்ந்தும் குறைந்தும் பலவாறு மாறிக்கொண்டு வரும் நிலைமையிலுள்ளவர்களும், தினக்கூலிகள் போன்ற வர்களும் இந்த மனப்பான்மையை அதிகமாகக் கொண் டிருக்கிறார்கள். இந்த உண்மைகளையெல்லாம் அந்த மாது தமது ஆராய்ச்சியிலிருந்து தெரிவித்திருக்கிறார்கள்.

தன்மதிப்பு என்ற உணர்ச்சி இன்னொரு வகையிலே வேடிக்கையாக வெளியாவதைக் கவனித்திருக்கலாம். ஓய்வு பெற்ற மேலதிகாரி, பள்ளிக்கூட உபாத்தியாயர் முதலிய வர்கள் முன்னைப் போலவே அதிகாரம் செலுத்த விரும்பு வார்கள். முதுமையடைந்தவர்கள் தங்களை முன்போலக் குடும்பத்திலுள்ளோர் மதிப்பதில்லை என்று தாழ்வுணர்ச்சி கொள்ளுவார்கள்.

இவ்வாறு தன்மதிப்பென்னும் உணர்ச்சியானது குழந்தைகள் முதற்கொண்டு முதியோர் வரை அனைவரிடத் திலும் தோன்றுகின்றது. இது வெவ்வேறு காரணங் களால் வெவ்வேறு அளவில் தோன்றும். உடல் சம்பந்த மான அலுப்பு, பசி, சோர்வு முதலியவைகளாலும், மனம் சம்பந்தமான பயம், சோகம், எதிர்பாராமல் ஏற்பட்ட ஆழ்ந்த உணர்ச்சி முதலியவைகளாலும் இது ஏற்படும். தன்மதிப்புக்குப் பங்கம் ஏற்படும்போது குழந்தை அழு வதையும், வயது வந்தோர் கொந்தளித்துக் குமுறுவதை யும் காணலாம். பழி வாங்குதல், கோபத்தால் கொதித் தெழுதல் முதலானவையெல்லாம் தன்மதிப்புக்குப் பங்கம் ஏற்படுவதால் விளையும் தாழ்வுணர்ச்சியை ஈடு செய்வதற் காக எழுகின்றவைகளே.

இந்தத் தாழ்வுணர்ச்சியிலிருந்து தப்பித்துக்கொள்ளு வதற்காகப் பலவித உபாயங்களைக் கடைப்பிடிப்பதுண்டு.

நோயாகப் படுத்துவிடல், இல்லாவிட்டால் அடிக்கடி பிரயாணம் செய்தல், ஓயாது படித்தல், என்ன என்னவோ பயனில்லாத விஷயங்களைப் பற்றியெல்லாம் தெரிந்துகொள்ளுதல் என்றிப்படிப் பலவகை உபாயங்களைக் குறிப்பிடலாம். இவையெல்லாம் வேண்டுமென்றே திட்டமிட்டுச் செய்கின்ற காரியங்கள் அல்ல. அப்படிச் செய்யும் மனப்பான்மை அறியாமலே ஏற்படுகிறது.

தன்மதிப்புக்குப் பங்கம் விளைவிக்கும் வேறு சில காரணங்களும் உண்டு. வறுமை, பிறர் தன்மேல் ஆதிக்கம் செலுத்துதல், யாரோ ஒரு எஜமானனையே நம்பி வாழ வேண்டியிருத்தல், தனக்கு அநீதி புரிந்ததாக ஏற்படும் உணர்ச்சி ஆகிய இவை போன்றவைகளை இங்கே எடுத்துக் காட்டலாம்.

தனிப்பட்டவர்கள் இவ்வாறு தன் மதிப்பை இழக்க நேரிடும்போது அவர்கள் குற்றம் புரிவதிலும், சமூகத்திற்கு ஏற்றதல்லாத காரியங்களைப் புரிவதிலும் தலையிடலாம். மனநோய்க்கும் இது காரணமாகிறது. பல பேர் சேர்ந்த கூட்டத்திற்கு ஒருங்கே இவ்வாறான தன் மதிப்புப் பங்கம் ஏற்பட்டால் அது இன்னும் விபரீதமாகிறது. சமூகத்தில் அமைதியில்லாமல் செய்தல், தெருச்சண்டையிடல், அவதூறு கிளப்பிவிடல் முதலான செயல்களுக்கு அது காரணமாகிறது. பள்ளிக்கூடத்தில் ஒரு வகுப்பில் படிக்கும் பிள்ளைகளின் கூட்டம், சமூகத்திலே ஒரு வகுப்பு, எண்ணிக்கை குறைந்தவர்களாக உள்ள ஒரு ஜாதி அல்லது கூட்டம், பொருளாதாரம் முதலிய வகைகளில் பின்தங்கி நிற்பவர்களின் கூட்டம் ஆகிய இவை போன்ற கூட்டங்களின் தன்மதிப்புக்குப் பங்கம் ஏற்படும்போது அதன் விளைவாகத் தொல்லைகள் ஏற்படுவதைத் தடுக்க முடியாது.

அரசாங்கமும், சமூகமும் இந்த உண்மையை உணர்ந்து அதற்கேற்றவாறு நிலைமையைச் சமாளிக்க வேண்டிய முயற்சிகளை மேற்கொள்ளவேண்டும். அதுவே அமைதிக்கும் இன்பத்திற்கும் வழியாகும்.

வேறொரு வகையிலும் தன்மதிப்புக்குப் பங்கம் வருவதுண்டு. புதிய பள்ளிக்குப் போய்ச் சேர்தல், புதிய வேலைக்குப் போதல், மணமாகி மாமியார் வீட்டுக்குச் செல்லல் என்றிவ்வாறு ஏற்படும் வாழ்க்கை மாறுதல் ஒரு புதிய பிரச்சினையை உள்ளத்திலே தோற்றுவிக்கிறது. புதுச் சூழ்நிலையை அடையும்போது மனத்திலே பயம் ஏற்படலாம்; சில காரியங்களைச் செய்யலாமா செய்யக்கூடாதா என்ற தடையுணர்ச்சி மனத்திலே போராட்டத்தையுண்டாக்கலாம். இவற்றின் மத்தியிலே ஒருவன் அல்லது ஒருத்தி தன் தன்மதிப்பை நிலைநாட்ட வேண்டியிருக்கிறது. சில சமயங்களில் புதிய சூழ்நிலை ஒருவனுடைய குறைபாடுகளைக் களைந்துவிட்டு மேல் நோக்கிச் செல்ல உதவுவதுண்டு. புதிய சூழ்நிலையில் சிலர் பாராட்டுக்குரியவாறு நடந்துகொள்ளப் பழகுவதுண்டு. ஒரு பள்ளியிலே சோம்பேறியாகவும், குறும்புக்காரனாகவும் இருந்த ஒரு மாணவன் புதியதோர் பள்ளியில் முயற்சி மிக்க நல்ல மாணவனாகி விடுவதுண்டு.

தன்மதிப்புக்குப் பெரிய சோதனையாக இருக்கும் மற்றொரு முக்கியமான விஷயம் ஒருவனுடைய இணை விழைச்சு சம்பந்தமான வாழ்க்கையாகும். தன்மதிப்பு உயரவும், அல்லது குறையவும் இது ஒரு முக்கிய அம்சமாக இருக்கிறது. இதைப்பற்றிப் பின்னால் ஆராய்வோம்.

# 7

# ஈடு செய்தல்

ஒருவனுக்கு ஏதாவது ஒரு காரணத்தால் ஒரு கை துண்டிக்கப்பட்டுவிட்டது என்று வைத்துக் கொள்வோம். அவன் தன்னுடைய மற்ருெரு கையை அதிகமாகப் பயன் படுத்த வேண்டி வருகிறது. அவனுடைய மற்ற கை அத ஞல் அதிக வலிமையையும், ஆற்றலேயும் கொஞ்ச காலத் தில் பெற்றுவிடுகிறது. இதை நாம் சாதாரணமாகக் காண லாம். ஒருவன் குருடனுக இருப்பான். அவனுடைய கையாலும் கர்லாலும் தொட்டுப் பார்த்து அறிந்து கொள் ளும் சக்தி மிக நுட்பமாக இருக்கும். கண் பார்வை இல் லாமையால் கையாலும் காலாலும் தொட்டுப் பார்த்தே நிலேமையை அறிய வேண்டியிருப்பதால் அவற்றின் ஸ்பரிச உணர்ச்சி நுட்பமாக வளர்கின்றது.

ஹெலன் கெல்லர் என்ற அம்மையார் சமீபத்திலே இந்தியாவுக்கு வந்திருந்தார்களல்லவா? அவர்களுக்குப் பார்வை, செவிப்புலன் ஆகிய இரண்டும் சிறு வயதிலேயே கெட்டுப் போய்விட்டன. ஆனல் அவர்களுடைய ஸ்பரிச உணர்ச்சி மிக நுட்பமாக ஓங்கியிருக்கிறது. அவரிடம் யாராவது ஆங்கிலத்திலே பேசினல் பேசுவோருடைய உதடுகளின் மேல் கையை வைத்துப் பார்த்தே அவர்கள் பேசுவதை உணர்ந்து கொள்கிருர்கள்.

மாம்பழக் கவிச் சிங்க நாவலர் என்ற ஒரு கவிஞர் தமிழிலே பல் பாடல்கள் பாடியிருக்கிருரல்லவா? அவருக்

குச் சிறுவயதில் வைசூரி கண்டு கண் பார்வை போய்விட்டது. அதற்குப் பதிலாக அவருக்கு வேறொரு சக்தி ஆச்சரியமான முறையில் வளர்ந்துவிட்டது. ஏதாவது ஒரு புதிய நூலை ஒரு முறை அவரிடம் வாசித்துக் காண்பித்தால் உடனே அந்த நூல் முழுவதையும் அப்படியே திருப்பிக் கூறிவிடுவாராம். இப்படிப்பட்ட சக்தியுள்ளவர்களை 'ஏக சந்தக் கிராஹி' என்று கூறுவார்கள். மாம்பழக் கவிச் சிங்க நாவலர் இராமநாதபுரம் சேதுபதி சமஸ்தானத்திலிருந்தபோது விசுவநாதபாரதி என்பவர் சேது மன்னரின் சகோதரரான பொன்னுச்சாமித் தேவர் மேல் ஒரு பிரபந்தம் இயற்றிக்கொண்டு அங்கு வந்தார். சேதுபதி சமஸ்தானத்திலே அந்தப் பிரபந்தத்தை அரங்கேற்றிப் பரிசு பெறவேண்டுமென்பது அவருடைய ஆவல். ஆனால் பார்வையிழந்த மாம்பழக் கவிச் சிங்க நாவலர் அரங்கேற்றத்தின்போது சபையிலே இருப்பது அவருக்கு அமங்களமாகத் தோன்றியது. அதை அவர் குறிப்பாகப் பொன்னுச்சாமித் தேவருக்குத் தெரியப்படுத்தினர். இதைத் தேவர் பொருட்படுத்தவில்லை. இதைத் தெரிந்துகொள்ளாதவர் போலிருந்துவிட்டார். ஆனால் விசுவநாத பாரதியின் உள்ளக் கருத்தை மாம்பழக் கவிச்சிங்க நாவலர் மிக நுட்பமாக அறிந்து கொண்டார். அதனால் விசுவநாத பாரதி தமது நூல் முழுவதையும் படித்து விளக்கம் செய்து முடித்ததும் மாம்பழக் கவிச் சிங்க நாவலர் எழுந்து அந்த நூல் விசுவநாத பாரதி பாடியதல்லவென்றும் தாமே முன்னொரு சமயத்தில் வேறொரு பிரபுவின்மேல் அதைப் பாடியதாகவும், அதில் வரும் பெயர்களை மாற்றி விசுவநாத பாரதி இப்பொழுது அரங்கேற்றியிருக்கிறார் என்றும் கூறினர். தாம் சொன்னது மெய்யென்று நிரூபிக்க அவர் அந்த நூல் முழுவதையுமே தவறில்லாமல் உடனே பாடிக் காண்

பித்தார். விசுவநாத பாரதி திகைப்பும் குழப்பமு மடைந்து செய்வதறியாது திண்டாடிப் போய்விட்டாராம். மாம் பழக் கவிச் சிங்க நாவலருடைய பெருமையை அறியாது அவரை அவமரியாதை செய்ய எண்ணியதற்காகப் பின்னல் விஷயத்தை அறிந்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டாராம்.

இவ்வாறு ஒரு குறைபாட்டை ஈடுசெய்வதற்காக வேருெரு சக்தி அதிகப்படுவதை இயற்கையிலே காண லாம். உடலுறுப்புக்களிலே ஏற்படும் இந்தக் குறை பாட்டை மூன்று வகையாகப் பிரிக்கலாம். 1. உறுப்பு ஊனமாகும் குறைபாடு. 2. உறுப்பு செய்யும் வேலைக் குறைபாடு. 3. தற்காலிக வேலைக் குறைபாடு.

ஏதாவது ஓர் உறுப்புப் பிறவியிலேயே பழுதுபட் டிருக்கலாம்; அல்லது நோய், விபத்து முதலான காரணங் களால் கெட்டுப் போகலாம்; அல்லது ஊனமாகிவிடலாம். இது உறுப்பு ஊனக் குறைபாடு என்ற பிரிவில் அடங்கும்.

ஒருவனுக்கு உறுப்புக்களெல்லாம் ஒழுங்காக எவ் விதக் குறைபாடுமின்றி யிருக்கும். ஆனல் அவை தமக்கேற் பட்டிருக்கும் வேலைகளைச் செய்வதில் திருப்தியளிக்காம லிருக்கலாம். காது நன்ருக இருக்கும். ஆனல் கேட்பதில் கொஞ்சம் குறையிருக்கும். கண் என்ற உறுப்பு யாதொரு குறையுமில்லாம லிருக்கலாம். ஆனல் பார்வை கொஞ்சம் மட்டாக இருக்கும். இவ்விதமாக உறுப்புக்கள் தங்கள் வேலையைச் செய்வதிலுள்ள குறைபாட்டைத்தான் வேலைக் குறைபாடு என்கிருேம்.

பெண்களின் உடலுறுப்புக்களிலே பூப்பெய்துகின்ற பருவத்திலும், கருப்பம் தரிக்கும் காலத்திலும், சுமார் 45 வயதுக்கு மேல் மாதவிடாய் நிரந்தரமாக நிற்கும்

காலத்திலும் பல மாறுதல்கள் மிக வேகமாய் நடைபெறு கின்றன. அந்தக் காலங்களில் பல உறுப்புக்கள் தங்கள் கடமைகளைச் செய்வதில் தற்காலிகமாக முழுத் திருப்தி யளிப்பதில் தவறிவிடுகின்றன. இவை போன்றவை தற் காலிக வேலைக் குறைபாடு என்ற பிரிவில் அடங்கும்.

பாரம்பரியமாகப் பெற்றோரிடமிருந்தே குழந்தைக்கு வரும் குறைபாடுகள் உண்டு. அல்லது முன்பே கூறியவாறு நோயாலோ விபத்தாலோ ஏற்படுவதுண்டு. உடல் உறுப்புக் கள் சம்பந்தமான குறைபாடுகளோடு மனத்திறமைகள் பற் றிய குறைபாடுகளும் உண்டு. இவ்விதமான குறைபாடுகளால் ஒருவனுக்குத் தன்னைப்பற்றியே குறைவாக நினைத்துக் கொள்ளும் நிலைமை ஏற்படுமல்லவா? இதனாலே தாழ்வு ணர்ச்சியுண்டாகிறது. மிக விரைவிலே தலை வழுக்கை விழுந்து போனவர்கள் நரைத்துப், போனவர்கள், குள்ள மானவர்கள், மிகப் பருத்தவர்கள் முதலியவர்களிடத்திலே இந்தத் தாழ்வுணர்ச்சி மறைவாக நின்று அவர்கள் வாழ்க் கைப் போக்கையும், நடத்தையையும் பாதிப்பதைக் கவனித்திருக்கலாம்.

ஆனால் இந்தக் குறைகளை ஈடு செய்வதற்கான சக்தி யும் நமக்குள்ளேயிருந்து வேலை செய்கிறது. முன்பே குறிப்பிட்டதுபோல ஒரு கையை இழந்தவனுக்கு அவ னுடைய மற்றொரு கை மிக வலிமையுடையதாகிவிடுகிறது; இரண்டு கைகளின் வேலையையும் திறமையோடு செய்யும் சக்தி பெற்றுவிடுகிறது. கண் பார்வையற்றவனுக்குக் காது கேட்கும் திறமை மிக மிக நுட்பமாக அமைவதுண்டு. மிக மெதுவாகக் காலெடுத்து வைத்து நடந்தாலும் அந்தச் சத்தத்திலிருந்து வருகிறவர்கள் யாரென்று கண்டுபிடிக்கக் கூடிய சக்தியைச் சில குருடர்களிடத்திலே கவனித்திருக்க

லாம். குருடர்களின் ஸ்பரிச உணர்ச்சி மிகுவதை முன்பே கூறினேன். இவ்வாறு ஈடு செய்யும் சக்தி ஒன்று வேலை செய்கிறது. நமது மனத்திலே ஏதோ ஒரு வேகம் நம்மையும் அறியாமல் இந்த வேலையைச் செய்வதாகத் தோன்றுகிறது. சில சமயங்களில் குறைபாடுள்ள ஓர் உறுப்பே நாளடைவில் மிக நுட்பமாக வேலைசெய்யத் தொடங்கி விடுவதுண்டு. சில சமயங்களில் இந்த ஈடு செய்யும் திறன் கொஞ்சம் குறைந்தும் போவதுண்டு.

பேச்சுக் குறைபாடுள்ளவர்கள் பின்னால் அந்தக் குறைபாடு நீங்கிச் சிறந்த மேடைப்பேச்சாளர்களாக மாறியதைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். கிரீஸ் நாட்டினரான தெமாஸ்தனீஸ் வரலாறு இதற்கு ஒரு நல்ல உதாரணம். கண்ணிலே ரண சிகிச்சை செய்யும் நிலைமை ஏற்பட்டு அதனால் அதன் திறமை குறைவாக இருந்தவர்கள் பின்னால் நுட்பமாகப் பொருள்களைக் கவனித்து அற்புதமான ஓவியங்கள் தீட்டும் ஓவியர்களாக மாறுவதுண்டு. பலவிதமான வர்ணங்களையும், அவற்றின் கலப்பையும், பொருள்களின் உருவத்தில் தோன்றும் வரி வளைவுகளையும், ஒளி நிழல் தோற்றங்களையும் மிக நுட்பமாகக் கண்டு அவற்றை ஓவியத்தில் காட்டக்கூடியவர்களாக அவர்கள் மாறலாம். இவ்வாறு குறைபாடுள்ள ஓர் உறுப்பு அதற்காக மிக அதிகமாகவே ஈடு செய்யப்படுகிறது. இவ்வாறு அதிகமாக ஈடுசெய்யப்படுவதை 'மிகை ஈடு செய்தல்' என்று கூறலாம்.

ஆனால் எல்லாச் சமயங்களிலும் இவ்வாறான 'மிகை ஈடு செய்தல்' வாய்ப்பதில்லை. குழந்தைகளிற் பலர் தொடக்கத்திலே இடது கையை அதிகமாக உபயோகிப்பதுண்டு. பலருக்கு இயல்பாக இந்தத் தன்மை இருப்பதாகக் கண்

டிருக்கிறார்கள். ஆனால் பெற்றோர்களும் மற்றவர்களும் இடது கையால் செய்யவேண்டாம்; தொட வேண்டாம் என்று தடுத்து வலது கையை உபயோகிக்கும்படி செய்வதாலேயே இந்த நிலைமை அவர்களில் வெகுபேரிடம் மாறி விடுகிறது. "அந்தக் கையிலே உணவைத் தொடாதே, வலது கையில் எடுத்துச் சாப்பிடு" என்று தாயார் குழந்தையிடம் கூறுவதை நாம் பல தடவை கேட்டிருக்கிறோம்.

சில குழந்தைகள் அவ்வாறு வலது கையை உபயோகிக்க முயன்றும் அந்த முயற்சியில் வெற்றிபெறாமல் போய்விடுகின்றன. அக்குழந்தைகள் பின்னால் இடது கையையே முக்கியமாகப் பயன்படுத்துபவர்களாக இருப்பார்கள். இங்கே குறைபாட்டை நிவர்த்திக்கவரும் ஈடுசெய்யும் சக்தி நன்றாக வேலை செய்யவில்லை என்று காணலாம். இவ்வாறு அது தன் வேலையிலே குறையுள்ளதாகவும் போவதுண்டு.

யோசித்துப் பார்த்தால் மனிதன் பல விலங்குகளைக் காட்டிலும் உடல் வலிமை குறைந்தவன் என்பது தெரிய வரும். இயற்கையிலே ஏற்படக்கூடிய தீங்குகள் பலவற்றை எதிர்த்து நிற்கக்கூடிய உடல் வலிமை அவனுக்குக் கிடையாது. அந்தக் குறைபாட்டிற்கு ஈடு செய்வதற்காக அவனுக்கு மூளை என்னும் சக்தி மிகுதியாகக் கிடைத்திருக்கிறது. இதைக்கொண்டு அவன் விலங்குகளையும், இயற்கையையும் வென்று உயர்வடைவதற்கு வேண்டிய ஆற்றலைக் கொண்டிருக்கிறான். அவனுடைய குறைபாட்டை ஈடுசெய்ய இந்தச் சக்தி அவனுக்குக் கிடைத்திருக்கிறது.

குறைபாட்டை ஈடு செய்யும் சக்தி ஒருவனுடைய சொந்த உயர்வுக்கும், நன்மைக்கும், மற்றவர்களுடைய

நன்மைக்கும் இன்பத்திற்கும் காரணமாக அமையலாம். இரட்டையர்கள் என்ற இரு புலவர்களைப்பற்றி அனைவரும் அறிந்திருப்பீர்கள். அவர்களில் ஒருவருக்குக் கண் தெரியாது; மற்றொருவர் முடம். அவர்களுடைய உடற் குறைபாட்டை ஈடு செய்யும் முறையிலே அவர்களிடம் சிறந்த கவிதை இயற்றும் ஆற்றல் இருந்தது. அவர்கள் பாடிய பாடல்கள் இன்றும் மக்களை மகிழ்விக்கின்றன. கலம்பகம் பாடுவதில் அவர்கள் மிக வல்லவர்கள் என்று பாராட்டப்படுகிறார்கள். அந்தகக்கவி வீரராகவ முதலியார் என்ற மற்றொரு அந்தகக் கவியைப்பற்றியும் நாம் அறிந்திருக்கிறோம். இவ்வாறு குறைபாட்டை ஈடு செய்யும் சக்தி புகழுக்கும் இன்பத்திற்கும் காரணமாக இருக்கலாம்.

ஆனால் இந்தச் சக்தி பழிக்கும் துன்பத்திற்கும் தீமைக்கும் காரணமாகவும் அமையலாம். இராமாயணத்தில் வரும் மந்தரையாகிய கூனி இதற்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டு. அவள் கூனியாக உடற் குறையோடிருந்தாள். அந்தக் குறைபாட்டை ஈடு செய்வதற்கு அவளிடத்திலே சூழ்ச்சித் திறமையும், வாக்கு வன்மையும் இருந்தன. ஆனால் அவை தீய வழியில் பயன்படுகின்றன. கைகேயியின் மனத்தைக் கலைத்துத் தசரதனிடத்திலே தன் மகன் பரதன் இராச்சியம் ஆளவும், இராமன் காட்டிற்குப் போகவும் வரம் வாங்குமாறு கூனி செய்துவிடுகிறாளல்லவா? குழந்தைப் பருவத்திலே இராமன் வில்லில் மண்ணுருண்டையை வைத்து மந்தரையின் கூனின்மேல் அடிக்கிறானென்பது கதை. அரச குமாரனைத் தண்டிக்கவோ அவனிடம் கோபங் கொள்ளவோ முடியாதல்லவா? அதனால் மந்தரைக்கு ஒன்றும் செய்ய முடியவில்லையாம். ஆனால்

அவளுக்கு அப்பொழுதேற்பட்ட வெறுப்புணர்ச்சி அடிமனத்திலே ஆழ்ந்து பதிந்து கிடந்திருக்கிறது என்று கூறலாம். அதனுல் தூண்டப்பட்ட கூனி தனது சூழ்ச்சித் திறனை இராமனுடைய மகுடாபிஷேக காலத்தில் தீய வழியில் பயன்படுத்துகிருள்.

உடற் குறைபாடு தீமைக்கும், சமூக நலத்திற்கு விரோதமான செயல்களுக்கும் காரணமாவதுண்டு. என் உறவினர்களில் ஒருத்தியான ஒரு பாட்டிக்கு முகத்திலே நீக்கமுடியாத ஒரு வடு ஏற்பட்டு அதனுல் முகம் விகாரமாகிப் போயிருந்தது. அந்தப் பாட்டி மற்றப் பெண்களின் மேல் குறை சொல்லுவதையும் கோள் சொல்லுவதையுமே தனது வாழ்க்கைத் தொழிலாகக் கொண்டிருந்தாள். இப்படிப்பட்டவர்களை ஒவ்வொருவரும் தங்களுடைய அனுபவத்தில் கண்டிருக்கலாம்.

ஆகவே மனிதனுக்கு ஒரு வகையிலே ஏற்பட்ட குறையை ஈடு செய்ய வேறு வகையிலே சக்தி கிடைக்கலாம். அந்தச் சக்தி நன்மையாகவும் அமையும்; தீமையாகவும் முடியலாம். குறைபாட்டை ஈடுசெய்யும் சக்தியாக நல்ல கலைத்திறமை அமைந்துவிட்டால் அது அவனுக்கு உயர்வையும் சமூகத்திற்கு இன்பத்தையும் அளிக்கிறது. இதிலிருந்து கலைஞர்கள் ஒவ்வொருவரும் ஏதோ குறைபாடு உடையவர்களென்று கருதக்கூடாது. குறைபாட்டை ஈடு செய்யக் கலைத்திறமை சிலரிடத்து அமைவதுண்டு என்று மட்டும் கூறலாம். இவ்வாறு மக்களின் இன்பத்திற்கும் நன்மைக்குமாக ஈடு செய்யும் சக்தி யமையாமல் போகின்ற நிலைமைகளிலே அது சமூகத்திற்குத் துன்பமாகவும் தொல்லையாகவும் முடிகின்றது.

# 8

# காதல் வாழ்க்கை

. மனிதனுக்கு அக்கம் பக்கத்தில் உள்ளவர்களோடு சுமுகமாகப் பழகி வாழத் தெரியவேண்டும்: அதாவது சமூகத்திலே அவனுடைய தொடர்பு நல்ல முறையில் அமைந்திருக்க வேண்டும். வீட்டிற்குள்ளேயே அவனுடைய வாழ்க்கையை எடுத்துக்கொண்டால் அவனுக்குத் தன் மனைவியோடுள்ள உறவு நன்கு அமையவேண்டும். இணைவிழைச்சு சம்பந்தமான அவனுடையவாழ்வு திருப்தி கரமாக அமைந்திருக்கவேண்டும். பிறகு அவன் தனது காலத்தைச் சரிவரப் பயன்படுத்தத் தெரிந்துகொண்டிருக்க வேண்டும். முதலாளியாக இருந்து மற்றவர்களை வேலைக்கு ஏவுகின்றவனுனாலும் அல்லது தானே உழைத்துத் தொழில் செய்பவனுக இருந்தாலும் அவனுடைய காலத்தை மனத்திற்கு ஹிதமான முறையில் செலவழிக்கும் நிலைமை இருக்கவேண்டும். இந்த மூன்று அம்சங்களும் நன்கு அமைந்துவிட்டால் வாழ்க்கை திருப்திகரமாக இருக்கும். இல்லாவிட்டால் வாழ்க்கையில் எத்தனையோ தொல்லைகளும், சிக்கல்களும் ஏற்படுகின்றன.

சமூகத்திலே அதன் விதிகளுக்கும், பழக்கவழக்கங்களுக்கும் இணங்கியிருந்து வாழ முடியாதவனுல் மற்றவர்களுக்கும் துன்பம் நேர்கிறது; அவனுடைய வாழ்வும் ஒழுங்காக அமைவதில்லை. இப்படிப்பட்டவர்களில் களவு, தெருச்சண்டை முதலிய சமூக விரோதமான செயல்களில் ஈடுபடுகிறவர்கள் ஒருவகை; அப்படி இழி செயல்களில்

இறங்காவிட்டாலும் மற்றவர்களோடு சுமுகமாகச் சேர்ந்து வாழத் தெரியாதவர்கள் மற்ருெரு வகை.

இவ்வாறு சமூகத்திற்கு விரோதமான நடத்தையுடையவர்களை ஆராய்ந்தால் அவர்களிற் பெரும்பாலானவர்கள் மேலே குறிப்பிட்ட முக்கிய அம்சங்களில் ஏதாவது ஒன்றிலோ அல்லது எல்லாவற்றிலுமோ திருப்தி காணுதவர்களாக இருப்பார்கள். பால் சம்பந்தமான வாழ்க்கை (இணைவிழைச்சு வாழ்க்கை), காலத்தை நன்கு பயன் படுத்தக்கூடிய தொழிலுள்ள வாழ்க்கை ஆகிய இரண்டிலும் திருப்தி யேற்படாத விடத்து எத்தனையோ தொல்லைகள் ஏற்படுகின்றன. அவற்றில் பால் வாழ்க்கையைப்பற்றி இப்பொழுது விரிவாகக் கவனிப்போம்.

சாதாரணமாகக் குமரப்பருவம் எய்தும் வரையில் ஆண் மகன் பெண்மகளைப்பற்றியும், பெண்மகள் ஆண்மகனைப் பற்றியும் அக்கறை கொள்ளுவதில்லை. சிறுவர்கள் தனித்தும் தங்களுக்குள்ளே சேர்ந்தும் விளையாடுவதிலும் செயல் புரிதலிலும் ஈடுபடுகிருர்கள். அதே போலச் சிறுமிகளும் தனித்தே தங்களுக்குள் விளையாடுவார்கள். குமரப்பருவத்தின் வளர்ச்சிக் காலத்தில்தான் வேற்றுப் பாலாரிடம் கவர்ச்சி ஏற்படுகிறது. அப்பருவத்திலே விவேகமும் பகுத்தறியும் திறனும் நன்கு அமையத் தொடங்குகின்றன. அதனுல் ஆண் இயல்பாகத் தன்னிடம் இல்லாத சில பண்புகளைப் பெண்ணிடம் காண்கிருன். அதேபோலப் பெண்ணும் தன்னிடத்திலில்லாத சில பண்புகளை ஆணிடத்துக் காண்கிருள். ஆணும் பெண்ணும் தங்களுக்குள் ஒருவரிடத்தி லில்லாத பண்புகளை மற்ருெருவர் ஈடு செய்து நிறைவுண்டாக்குவதாக உணர்கிருர்கள். அதிலே காதலின் வித்துத் தோன்றுகிறது.

இவ்வாறான ஒரு போக்குத்தான் சாதாரணமாக ஏற்படவேண்டும். அதுதான் இயற்கை இயல்போடு ஒத்த நிலையாகும். ஆனால் இவ்வாறு எல்லோரிடத்திலும் இயல்பாக ஏற்படுவதில்லை. சமூக வாழ்விற்கு அடிப்படையாகவுள்ள ஆண் பெண் சேர்ந்து வாழும் வாழ்க்கை முறையைப் பற்றி மக்களுக்குச் சரியான விஞ்ஞான ரீதியில் அமைந்த திருத்தமான அறிவு கிடைப்பதில்லை. அதைப்பற்றி நமது கல்விமுறை மௌனம் சாதிக்கிறது. எஸ்கிமோ என்னும் சாதியார் பனிக் கட்டியிலேயே வீடு கட்டுகிறார்களென்றும், பச்சை மீனையே தின்கிறார்கள் என்றும் இந்த விஷயத்தைப் புரிந்துகொள்ள முடியாத குழந்தைகளுக்கு இரண்டாம் வகுப்பிலேயே சொல்லிக் கொடுக்கிறதை நான் கவனித்திருக்கிறேன். ஆனால் அந்தக் குழந்தைகளுடைய சொந்த வாழ்க்கை முறை எப்படி அமைந்தால் நன்றாக இருக்கும் என்பதை அதைப் புரிந்து கொள்ளக்கூடிய பருவத்தில்கூட யாரும் சொல்லுவதில்லை. எஸ்கிமோ பச்சை மீனைத் தின்கிற விஷயம் முக்கியமோ இல்லையோ, அதை வேண்டாமென்று நான் இப்பொழுது கூற வரவில்லை. ஒவ்வொரு ஆணுக்கும் ஒவ்வொரு பெண்ணுக்கும் அவர்களுடைய வாழ்க்கைக்கு அத்தியாவசியமாக வேண்டிய அறிவை விஞ்ஞான முறையில் கொடுக்க ஏற்பாடிருக்க வேண்டும் என்பதையே எடுத்துக் காட்ட முயல்கிறேன். பால் சம்பந்தமான வாழ்க்கை ஒவ்வொருவருடைய தனி விஷயம்; அது தானாகவே தெரிந்துவிடும் என்பது பொதுவான கருத்து. அதனால் அதுபற்றிச் சொல்லிக் கொடுக்கவேண்டியதில்லை என்றும் கூறுகிறார்கள். பல விஷயங்கள் தாமாகவே தெரிந்து விடுகின்றன. அதற்காக அவற்றைக் கற்பிக்காமல் விடுவதில்லை. மனிதன் உயிர் வாழ்வதற்கு உணவு அவசியம். இதைக் கற்

றுத் தராவிட்டாலும் அனுபவத்தில் இது தெரிந்துபோகும். ஆனால் உணவைப் பற்றிக் கற்றுக் கொடுக்காமலிருக்கிறோமா? உணவின் அவசியம், அதில் கலந்திருக்க வேண்டிய பலவகைச் சத்துப் பொருள்கள், அதைப் பக்குவம் பண்ணும் முறை, அதைச் சுத்தமாக வைக்கும் முறை என்றெல்லாம் விஞ்ஞான முறையில் கற்றுத் தருகிறோம். விஞ்ஞான முறையிலே வாழ்க்கைக்கு அத்தியாவசியமாக வேண்டிய எல்லா அறிவையும் இவ்வாறு புகட்டுவது நல்லது. அது வாழ்க்கைக்கு அனைவரையும் சரியானமுறையில் தயார் செய்ய முயலும் கல்வித் திட்டத்தில் இடம் பெறாமலிருப்பது சரியாகத் தோன்றவில்லை.

இயல்பாகவே வேற்றுப் பாலாரோடு பழகுவதில் மக்கள் சரியான மனப்பான்மையைக் கொண்டிருக்கிறார்கள். சமூகத்தின் சம்பிரதாயங்களும் கட்டுப்பாடுகளும் இதற்கு மறைமுகமாக உதவி புரிகின்றன. ஆனால் சில ஆண்களால் பெண்களோடு இயல்பாகப் பழகமுடிவதில்லை. அவர்களிடம் சகஜமாக வார்த்தையாடவும் அவர்களை நேராகப் பார்க்கவுங் கூடக் கூசுகிறார்கள். இவர்களுக்குப் பெண்களின் முன்னால் வார்த்தை தடுமாறுகிறது; முகத்தில் வேர்வை அரும்புகிறது; தண்ணீரிலிருந்து எடுத்துத் தரையிலே போட்ட மீனைப்போல இவர்கள் பெண்கள் முன்னிலையில் அவதியுறுகிறார்கள்.

இவர்களுக்கு நேர்மாறான முறையில் ஒழுங்குக்கு மீறி வரம்பு கடந்து நடந்துகொள்ளுபவர்களும் உண்டு. சமநிலையை எய்தாத இந்த இருவகையினரும் குறைபாடுடையவர்களே. நாணிப் பின்வாங்குகிறவன், விலங்குத் தன்மையுடையவன் ஆகிய இருவரும் மிகுந்த தாழ்மை உணர்ச்சியால் பாதிக்கப்பட்டவர்களேயாவார்கள். நாணி நிற்பவன்

பலவகையான ஏமாற்றங்களால் துன்புற்றவனாக இருக்கலாம். மற்றவனிடத்திலே பெண்களுக்குள்ள மென்மையான பண்புகளை அறியக்கூடிய நுட்பவுணர்ச்சியே இல்லாமலிருக்கலாம்.

காதல் வாழ்வென்பது ஆணிடத்திலே பெண் தன்னை முற்றிலுமாக உடைமைப் பாங்கில் சமர்ப்பித்து விடுவதல்ல. ஆணும் தன்னிடத்தே குறைவாகவுள்ள பண்புகள் பெண்ணிடத்தே இருப்பதை உணர்ந்து தன்னை அவளிடம் ஒப்படைக்கும் மனப்பான்மையைக் கொண்டிருக்கும்போது தான், அதாவது பரஸ்பரம் இவ்வாறு ஒருவரிடம் மற்றவருக்கு உணர்ச்சி இருக்கும்போதுதான், காதல் முழுமை எய்துகிறது. நல்ல வேளையாக நூற்றுக்கு நூறு விலங்குத் தன்மையே கொண்ட ஆடவன் இருப்பதரிது. அப்படிப்பட்டவன் தனது விலங்கிச்சையைப் பூர்த்தி செய்துகொள்ளும் கருவியாகவே பெண்ணைக் கருதுவான். ஆனால் அவன் இணைவிழைச்சு வாழ்விலே இன்பம் எய்துவதாகக் கருதக்கூடாது. அவனோடு சேர்ந்து வாழும் பெண்ணும் இன்பங் காண முடியாது.

ஆண்மைப் பண்புகளும் பெண்மைப் பண்புகளும் சரிக்குச் சரியாக இணைந்த ஆடவனே சிறப்புடையவனாகத் தோன்றுகிறான். இந்தக் கருத்தை அடிப்படையாகக் கொண்டுதான் தத்துவத்தின் உயரிய நிலையிலே நம் முன்னோர்கள் இறைவனுடைய திருவுருவத்தை ஆண் பாதி பெண் பாதியாக வகுத்துள்ளார்கள்; வகுத்தார்கள் என்று கூறுவதைவிடக் கண்டு போற்றினார்கள் என்று கூறுவது பெரிதும் பொருத்த முடையதாக இருக்கும்.

இந்தச் சமநிலைக்கு மாறுபட்டதெல்லாம் தாழ்மையுணர்ச்சியின் விளைவாக ஏற்பட்டதெனக் கூறலாம்.

வலிமையான ஆதிக்கம் செலுத்தும் தாயால் வளர்க்கப் பட்ட பையன், அல்லது இளமையிலே ஆதிக்க மனப் பான்மை கொண்ட பெண்களால் சூழப்பட்டவன், தன்னை யறியாது பெண் குலத்தினிடத்திலே ஒரு வெறுப்புணர்ச்சி யைக் கொள்ளுகிறான். அது பல சிக்கல்களை விளைவிக் கிறது. விலங்குத் தன்மையே மிகுந்தவன் தனது தாழ்மையுணர்ச்சியை ஈடுசெய்வதாகப் பாவித்துக்கொண்டு தகாத வழியில் நடக்கிறான். ஆனால் உண்மையில் அவனும் பூரண இன்பத்தைப் பெறாது அலைபவனே.

பொதுவாகக் கூறப்போனால் எல்லாவிதமான தாழ்மை உணர்ச்சிகளும் ஒருவனுடைய இணைவிழைச்சு வாழ்க் கையை ஏதாவது ஒரு வகையில் பாதிக்கும். உடற் குறை பாடு முதலான குறைபாடுகளை யுடையவர்கள் அவற்றின் காரணமாக ஏற்படும் தாழ்வுணர்ச்சியின் காரணமாக வேற் றுப்பாலாரிடத்தில் சமநிலையில் நடந்துகொள்ளத் தவறு வார்கள்.

9

# வேலைச் சிக்கல்

தானாக ஒரு அழகிய பொருளைச் சிருஷ்டி செய்கிறவன் பெரிய மகிழ்ச்சியை அடைகிறான். வறுமையால் வாடித் துன்புறுகின்றபோதும் அவன் உள்ளம் சிருஷ்டி இன்பத் திலே துள்ளிக் குதிக்கிறது. உடலையே மறந்து கலைப் படைப்பில் திளைத்திருந்த பலருடைய வரலாற்றை நாம் அறிவோம்.

குளிரால் நடுங்கும் உடலைப் பாதுகாத்துக்கொள்ள வகையில்லாமலும், படுத்துறங்க நல்ல இடம் கிடைக்கா மலும் வருந்திக் கொண்டிருந்த நிலையிலே சத்திமுற்றப் புலவருக்கு ஓர் அருமையான கவிதை உதயமாயிற்றல்லவா? வானிலே பறந்து செல்லும் நாரையிடம் தமது மனைவிக் குச் சேதி அனுப்புவதாக ஒரு நல்ல கவிதையைப் பாடி யிருக்கிறார், அவர்.

பாரிஸ் நகரத்திலே ஒரு சிற்பி தனது சிறிய அறை யிலே நீண்ட நாட்களாகச் சலவைக்கல்லால் ஒரு சிலை செய்து கொண்டிருந்தானாம். அந்தச் சிலை பூர்த்தியான தும் அதைப் பார்க்க வேண்டுமென்று பல பேர் ஆவலாக இருந்தார்கள். அது எப்பொழுது முடிவடையும் என்று சிற்பியிடம் கேட்டுக்கொண்டே யிருந்தார்கள். ஒரு நாள் மாலையிலே தன்னைக் காண வந்த மக்களிடம் அடுத்த நாள் காலையில் வந்தால் சிலையைப் பார்க்கலாம் என்று அவன் கூறினானாம். அடுத்த நாளை ஆவலோடு எதிர்பார்த்துக்

கொண்டு மக்கள் திரும்பிவிட்டார்கள். சிற்பி தனது அறையிலே இருந்த ஒரு சிறிய லாந்தர் வெளிச்சத்திலேயே சிலைக்கு இறுதியாகச் செய்ய வேண்டிய நயச் சிறப்பு வேலைகளையெல்லாம் செய்து அதை நயனமோக்கம் செய்து விட்டுப் படுக்கப் போனனும். அந்தச் சமயத்திலே எதிர் பாராத விதமாக உறைபனி மிகுதியாகப் பெய்யத் தொடங்கியது. சிற்பியின் அறையிலே குளிரைப் போக்குவதற்குக் கனப்புக் கிடையாது ; நிலக்கரி வாங்க அவனிடம் பணம் இல்லை. புதிதாக உருவாகிய சலவைக்கற் சிலையைக் குளிர் படும்படி அப்படியே விட்டுவிட்டால் அதன் மேலே சின்னச் சின்ன வெடிப்புகள் தோன்றிவிடும். சிற்பி அதை விரும்பவில்லை. தனது உடம்பைக் குளிரிலிருந்து காத்துக் கொள்வதற்காக அவன் தன் மேலே போட்டுக்கொண்டிருந்த ஒரே ஒரு நீண்ட கம்பளிக் கோட்டைக் கழற்றி அந்தச் சிலைக்குப் போர்த்துவிட்டு அவன் சிலையருகே படுத்து நிம்மதியாக உறங்கிவிட்டான். காலையில் மக்கள் ஆவலோடு சிற்பியின் அறைக்கு வந்தார்கள். சிலை உயிர்கொண்ட அற்புதமாக நின்றது; சிற்பி அதன் காலடியில் உயிரற்று விறைத்துக் கிடந்தானும்.

கலைப் படைப்பிலே உண்டாகும் இன்பம் உயிரையும் பொருட்படுத்தாது மேலோங்குகிறது என்பதற்கு இரண்டு உதாரணங்களைப் பார்த்தோம். ஆனல் இன்று தொழிற் சாலைகளிலே யந்திரங்களின் இடையிலே வேலை செய்கின்றவனுக்கு இத்தகைய இன்ப உணர்ச்சி ஏற்படுவதில்லை; யந்திரத்தின் ஒரு பாகமாக அவன் ஐக்கியமாகிவிடுகிருன்; அவன் திருப்பித் திருப்பி ஒரே மாதிரியான பொருள்களை உண்டாக்கிக் குவிக்க யந்திரத்திற்கு உதவுகிருன். பலசமயங்களில் அவன் ஒரு முழுப் பொருளை உண்டாக்கும் திருப்தியைக்கூட அடையமுடிவதில்லை. ஏனென்ருல் பெரும்பாலும்

அவன் ஒரு பொருளின் ஏதாவது ஒரு பாகத்தையே செய்துகொண்டிருப்பான். அவன் தனது உழைப்பை ஏதோ ஒரு யந்திரத்திற்கு விற்றுவிடுகிறுன். அவனுக்குத் தனது படைப்பிலே இன்ப உணர்ச்சி ஏற்படுவதில்லை. அவனுடைய வாழ்க்கையே அவனுக்குப் பொருளற்றதாக மாறிவிடுகிறது. அதனுல் அவனுடைய தன்மதிப்புப் பெரிதும் குறைகிறது; தாழ்வுணர்ச்சி தலையெடுக்கிறது.

இதற்கு ஈடு செய்யும் வகைகளில் ஒன்றுகவே தொழிலாளர் இயக்கங்கள் தோன்றுகின்றன. பொருளாதார நிலைமையை உயர்த்துவதும் தொழிலாளர் இயக்கங்களின் நோக்கமாக இருந்தாலும் அது மேலே குறிப்பிட்டபடி ஈடு செய்யும் தன்மை கொண்டிருப்பதாலேயே தொழிலாளரின் உள்ளத்தைக் கவர்ந்து வலிமை பெறுகின்றது. தொழிலாளர்கள் கால்பந்து முதலிய விளையாட்டுக்களிலும், போட்டிப் பந்தயங்களிலும் மிகுந்த உற்சாகம் காட்டுவதும் மற்றெரு வகையில் ஈடு செய்கிறது. விளையாட்டானது மனத்திலே உணர்ச்சிக்கு எழுச்சியைக் கொடுக்கிறது; துணிச்சலாகக் காரியம் செய்யவேண்டிய சந்தர்ப்பங்களையும் கொடுக்கிறது. வெற்றியை அடையவும் வழி காட்டுகிறது. இவற்றுல் உள்ளத்தைக் கவர்கின்றது. சினிமாக்காட்சி மற்றெரு வகையில் ஈடுசெய்ய முயல்கிறது. தங்களை மறந்து சினிமாக் கதையில் வருகின்ற பாத்திரங்களோடு ஒன்றிப்போய் அப்பாத்திரங்கள் மூலமாகக் கற்பனையான வெற்றியை அவர்கள் காண்கிறுர்கள்.

நடுத்தர வகுப்பினரிடத்திலும், முதலாளி வருக்கத்தினரிடத்திலும் வெறுப்புக் கொள்வது, அவர்களை இழிவாகப் பேசுவது, அவர்கள் கொடுமை செய்வதாகச் சித்திரிக்கும் சினிமாப் படங்களை விரும்பிக் காண்பது முதலிய

வைகளும் ஈடுசெய்யும் காரியங்களாக அமைகின்றன. சினிமாவைப் பெரிதும் விரும்பி அடிக்கடி பார்க்கின்றவர்கள் தொழிலாளிகள்தான். ஆகவே இதிலிருந்து ஒரு சில வகையான கதைப் போக்கும், நிகழ்ச்சிகளும் கொண்ட சினிமாப் படம் கலைக் கண்ணோடு பார்க்கின்றவர்களுக்குத் திருப்தி யளிக்காவிட்டாலும் மக்களால் விரும்பிப் பல தடவைகள் பார்க்கப்படுவதன் அடிப்படைக் காரணத்தை ஊகித்துக்கொள்ளலாம். கலாரசிகர்களுக்குத் திருப்தி யளிக்கும் சில படங்கள் பண வசூல் முறையில் வெற்றி பெறுதிருப்பதற்கும் காரணத்தை உணர்ந்து கொள்ளலாம்.

தொழிலாளர்களின் உள்ளத்திலே ஏற்படும் தாழ்வுணர்ச்சிகளையும், குறைபாடுகளையும் அறிந்து அவற்றைத் தவிர்க்க முயல்வது அவர்களுக்கு நன்மை பயப்பதோடு, சமூகத்தின் வளத்திற்கும் நலத்திற்கும் இன்றியமையாததாகும்.

## 10

# தாழ்வுணர்ச்சிச் சோதனை

• தாழ்வுணர்ச்சியை நேரடியாக அளவிட முடியுமா? உள்ளத்திலே ஏற்படும் இந்த உணர்ச்சியை யந்திரக் கருவிகள் கொண்டு அளக்க இயலாது. ஆனால் அதை நேராக அளக்க முடியாவிட்டாலும் மறைமுகமாக அநுமானிக்கலாம்.

மரத்தின்மேல் ஏற முடியாது போனாலும், அந்த மரத்தின் நிழலைக் கொண்டு அதன் உயரத்தைக் கணக்கிட முடியுமல்லவா? அதுபோலவே தாழ்வுணர்ச்சியின் அளவை அதனால் விளையும் செயல்களிலிருந்து ஏகதேசமாகக் கண்டுபிடிக்கலாம். தாழ்வுணர்ச்சி யுடையவனுடைய நடை, தோற்றம், பேச்சு முதலியவைகள் அந்தத் தாழ்வுணர்ச்சியை வெளிப்படுத்துகின்றன. அவற்றிலிருந்து அந்த உணர்ச்சியின் அளவை நாம் உத்தேசமாகத் தீர்மானிக்கலாம். ஒருவன் எழுதும் எழுத்தும் அவனுக்குள்ள தாழ்வுணர்ச்சியை வெளிப்படுத்தும் என்று கண்டிருக்கிறார்கள். தாழ்வுணர்ச்சி மிகச் சிறிய எழுத்தால் வெளிப்படுகிறதாம். மிக மிகச் சிறியதாக எழுத்தை எழுதுகிறவன் ஒருவனைத் தாழ்வுணர்ச்சியால் பீடிக்கப்படுகிறான். இதே உணர்ச்சி அந்தக் குறைபாட்டிற்கு ஈடுசெய்யும் சக்தியின் காரணமாகப் பெரிய எழுத்துக்களின் மூலமும் வெளியாகும் தாழ்வுணர்ச்சியின் விளைவாக ஒன்றுக்கொன்று நேர் எதிரான செயல்கள் அல்லது தன்மைகள் உண்டாவதை இந்த உதாரணத்திலிருந்து தெரிந்துகொள்ளலாம்.

சாதாரணமாக எல்லோரையும் போலப் பேசிக்கொண்டிருப்பவன் மேலதிகாரியின் முன்னிலையில் திக்கித் திக்கிப் பேசுகிறானென்றாலும், ஒருவன் காலெடுத்து வைக்கும் போதே சந்தேகப்பட்டுப் பின்வாங்குகிறானென்றாலும் அவன் தாழ்வுணர்ச்சியால் பீடிக்கப்படுகிறான் என்பதை அறிந்துகொள்ளலாம்.

வீட்டிலே பெண்டாட்டியின் அமிதமான ஆதிக்கத்திலே கட்டுண்ட ஒருவரை நான் அறிவேன். அவர் எப்பொழுது பார்த்தாலும் ஏதோ அவசர சோலியாக எங்கோ போய்க்கொண்டிருப்பதுபோலப் பட்டணத்தைச் சுற்றிக்கொண்டிருப்பார். நடந்து போவார்; ரிக்ஷாவில் போவார்; பஸ்ஸில் ஏறிச் செல்லுவார். காரியம் என்னவென்று பார்த்தால் ஒன்றும் இருக்காது.

பெற்றோரின் முன்னிலையிலே வீட்டில் செய்யுளை நன்றாக மனப்பாடம் செய்து ஒப்பித்த பையன் பள்ளியிலே உபாத்தியாயர் முன்னிலையிலே ஒரு வார்த்தைகூடச் சொல்ல முடியாமல் விழிப்பதைப் பலர் கண்டிருக்கலாம். உபாத்தியாயர் முன்னிலையிலே ஏற்பட்ட தாழ்வுணர்ச்சி தான் இதற்குக் காரணம்.

அதிகாரம் செய்யும் ஆற்றலும் தைரியமும் இல்லாதவர்கள் சிலர் மிக உரத்துப் பேசுவதைப் பார்த்திருக்கலாம். வேலைக்காரர் முன்னிலையிலும், உறவினர் முன்னிலையிலும் அவர் சத்தம் போட்டு அதிகாரத் தொனியிலே முழங்குவார். ஆனால் உள்ளுக்குள்ளே கோழைத்தனம் இருக்கும்.

குறைபாட்டிற்கு ஈடு செய்யும் சக்தியால் சில வேளைகளில் காரியம் எதிர்பார்த்ததற்கு முற்றிலும் மாறாக நடப்பதுண்டு. கால்பந்து விளையாட்டிலே சுமாராக விளை

யாடும் ஒரு கோஷ்டி மிகச் சிறந்த வேறொரு கோஷ்டி யோடு விளையாடும்போது எதிர்பார்த்ததற்கு மாருக மிக நன்ருக விளையாடுவதுண்டு. இவ்வாறே வேறு காரியங் களிலும் ஏற்படுவதுண்டு.

தாழ்வுணர்ச்சியைக் கனவுகளின் ஆராய்ச்சியிலிருந் தும் கண்டறியலாம். கீழே விழுவது போன்ற அனு பவம், ரெயிலைப் பிடிக்க முடியாமல் தவற விடுதல் போன்ற கனவுகள் தாழ்வுணர்ச்சியை வெளிப்படுத்தும். கனவுகள் ஏற்படுவதற்குப் பல காரணங்கள் கூறுகிருர்கள். அவற் றில் மிக மிக முக்கியமானது, "கனவுகள் அடிமனத்திலே அழுந்திக் கிடக்கும் நிறைவேருத உணர்ச்சிகளின் தோற் றம்" என்பது. அந்த உணர்ச்சிகள் தம் சுய ரூபத்தோடு கனவில் தோன்ருமல் குறியீடுகளாகவும் மாறு வேஷத்தி லும் தோன்றும் என்று முன்பே கூறினேன். தாழ்வுணர்ச் சியும் இவ்வாறு கனவில் தோன்றுகின்றன.

குழந்தைப் பருவ அனுபவங்களை நினைவிற்குக் கொண்டு வரச்சொல்லி அவற்றை ஆராய்தலும் தாழ்வுணர்ச்சியை அறிய ஒரு வழியாகும். அதேபோல ஒருவனுடைய பகற்கனவை ஆராய முடியுமானல் அதுவும் இந்த உணர்ச்சியின் இருப்பைக் காட்டிவிடும்.

மேலே கூறியவைகளெல்லாம் ஓரளவு சுமாராகத் தாழ்வுணர்ச்சியைக் காட்ட உதவுமேயன்றி, அதை முற்றி லும் அறிந்துகொள்ள உதவா. அப்படி அறிந்துகொள்ளு வதும் எளிதல்ல. இந்த உணர்ச்சி சிக்கலான முறையில் வெளிப்படுவதால் அதை அளவிடுவதில் எத்தனையோ சிரம மிருக்கிறது.

ஒருவன் தன்னைப்பற்றியே கொண்டிருக்கும் அபிப் பிராயத்தை ஆராய்ந்தால் அவன் எவ்வளவு தூரம் தன்னை

உயர்வாக மதிக்கிறான் என்பது வெளியாகும். தன்னுடைய இயல்பான பண்பை ஆராயும்போது மனிதன் தான் எப்படியிருக்க விரும்புகிறானோ அதையே முன்னிருத்தி எண்ணுவான்; அதைப் போலவே தான் இருப்பதாகவும் நினைப்பான்.

தாழ்வுணர்ச்சியால் பாதிக்கப்பட்டவனுடைய உண்மையான பண்புக்கும், அவன் தன்னைப் பற்றிக் கற்பனை செய்துகொண்டிருக்கும் பண்புக்கும் வேறுபாடு மிக அதிகமாக இருக்கும். அந்த வித்தியாசமே அவன் வாழ்க்கையைப் பாதித்து அவனுடைய மனநிலைமையைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்கும்.

## 11

# தாழ்வால் வந்த உயர்வு

தாழ்வுணர்ச்சியால் பாதிக்கப்பட்டவர்களிடம் அதனை ஈடு செய்யும் விளைவாக உயர்வுணர்ச்சியும் தோன்றுகிறதென்று முன்பே கண்டோம். இதுதான் ஆட்லரின் முக்கியமான கொள்கை. ஒருவன் ஏதாவது ஒரு வகையில் தாழ்வடைந்திருப்பதை ஈடுசெய்வதற்காக வேறொரு வகையில் உயர்வடைய முயல்கிறான். சமூகத்தின் முன்னால் தான் உயர்வுடையவன் என்று காட்டிக்கொள்ள வேண்டுமென்ற ஓர் உந்தல், ஒரு வேகம், அவனைத் தூண்டுகிறது. கண்ணிழந்த ஒரு சிலர் எவ்வாறு கவிதையின் மூலம் உயர்வு காட்டினார் என்று முன்பே பார்த்தோம்.

இவ்வாறு சமூகத்திற்குப் பயனுள்ள வழியில் இந்த உயர்வுணர்ச்சி வேலை செய்தால் நல்லதுதான். சமூகம் அதனால் நன்மை அடையும்; நன்மை யடையாவிட்டாலும் துன்பமடையாது. ஆனால் எல்லோரிடத்திலும் இந்த உயர்வுத் தூண்டல் சமூக நலத்துக்கான முறையிலேயே வேலை செய்வதில்லை. சமூகத்திற்கு விரோதமான வழிகளில் அது வேலை செய்வதும் உண்டு. குற்றம் புரிந்து எல்லோருடைய கவனத்திலும் படும்படியாக வாழ்வதும் இந்த உயர்வுந்தலின் வேலைதான். அழகில்லாத ஒரு பெண் மற்ற பெண்களின்மேல் எப்படியாவது பழி தூற்ற வேண்டுமென்று தன்னையுமறியாமல் விரும்புவாளானால், அவளுடைய செயல் தொல்லை விளைவிப்பதற்கே காரணமாகும்.

நல்ல காரியம் செய்து அதன் மூலம் கீர்த்தி யடைந்து தனது உயர்வை நிலைநாட்டாமல், கெட்ட காரியம் செய்து அபகீர்த்தி யடைந்து எல்லோர் கவனத்திலும் படும்படி யாக வாழ்வதும் இந்த உந்தலின் தூண்டுதல்தான்.

இன்னும் இந்தத் தாழ்வுணர்ச்சி உயர்வுணர்ச்சிச் சிக்கல் எப்படி யெல்லாம் வேலை செய்கிறது என்பதைக் கவனித்தால் வேடிக்கையாக இருக்கும்.

எப்படியாவது மற்றவர்களை விட ஏதாவது ஒரு வழி யில் உயர்வாக இருக்கவேண்டு மென்ற உந்தல் இருக்கிற தல்லவா? அது சில சமயங்களிலே உண்மையாகவே நிறை வேருவிட்டால் கற்பனை வழியிலே நிறைவேறுவதுண்டு. தாழ்வுணர்ச்சியால் பீடிக்கப்பட்டவன் தன்னை உயர்ந்தவ னுகக் கற்பனை செய்துகொள்ளுவான். பகற் கனவின் மூலமும் இந்த ஆசை நிறைவேறுவதுண்டு.

கனவிற்கும் பகற்கனவிற்கும் முக்கியமான வேறு பாடுகள் உண்டு. அடிமனத்திலே அழுந்திக் கிடக்கும் ஆசைகள் வேற்றுருக் கொண்டும், சின்னங்களாகவும், குறி யீடுகளாகவும் கனவில் தோன்றும் என்று முன்பே தெரிந்துகொண்டோம். பகற்கனவு காண்பதை ஆகாயக் கோட்டை கட்டுதல் என்றும் கூறுவார்கள் அதாவது ஒருவன் தான் என்ன என்னவோ அருஞ் செயல்களைச் சாதிப்பதாகக் கற்பனை செய்து கொள்ளுவான். வாழ்க் கையில் அவன் சாதிக்க விரும்பும் காரியங்களையெல்லாம் உண்மையாகச் செய்ய முயலாமல் தான் அவ்வாறு செய்வ தாகக் கற்பனை பண்ணுவான். இந்தப் பகற் கனவிலே பகற் கனவு காண்பவனே நடுநாயகமாக விளங்குவான். அதில் நடைபெறும் பெரிய பெரிய அருஞ் செயல்களுக் கும் அவனே கர்த்தாவாக இருப்பான். ஆனல் கனவிலே

அவ்வாறிருக்காது. மேலும் கனவு தூக்க நிலையிலே தோன்றுவது; பகற் கனவோ விழித்திருக்கும் நிலையிலே கற்பனை செய்யப்படுவது. இப்படிப் பகற்கனவின் மூலமும் உயர்வுணச்சி பூர்த்தியாவதுண்டு. இதனால் யாதொரு பயனும் இல்லை. பகற்கனவு காண்பவன் அதிலேயே இன்பங் காணத்தொடங்கி வரவரச் செயலொழிந்து போவான். காரியத்தைச் செய்து முடிக்கும் திறமை அவனிடம் குறைந்து போகும். மேலும் மேலும் அதிகமாக அவன் பகற்கனவிலேயே மூழ்கத் தொடங்குவான்.

இன்னொரு வகையிலே ஒருவன் தனது உயர்வைக் கற்பனையாக நிலைநாட்ட முயல்வதுண்டு. அது ஒரு வகையில் நன்மை பயக்கிறது.

தந்தை குழந்தையைத் திட்டுகிறார்; அடிக்கவும் செய்கிறார் என்று வைத்துக்கொள்வோம். குழந்தை தந்தையை எதிர்த்துத் திட்டவோ அடிக்கவோ முடியாமல் வருந்தித் தன்மதிப்பை இழக்கிறது. அப்பொழுது அது தனக்குள்ள தன்மதிப்பை நிலைநாட்டி உயர்வு காட்டுவதற்கு ஒரு வேடிக்கையான முறையைக் கையாளுகிறது. தனியாக ஓரிடத்தில் யாருக்கும் தெரியாதபடி, அல்லது யார் காதிலும் கேளாதபடி இருந்துகொண்டு தந்தையைத் திட்டத் தொடங்கும். அல்லது தனது விளையாட்டுப் பொம்மையையோ அல்லது வேறு பொருளையோ வையவும் அடிக்கவும் தொடங்கும். அதில் தான் தந்தையின் ஸ்தானத்தை வகித்துக்கொள்ளும். இந்த முறையிலே கற்பனையாகத் தனது உயர்வை நிலைநாட்ட முயலும்.

மாணவர்கள் தமது உபாத்தியாயர்களைப் பற்றி என்ன என்னவோ பேசிக்கொள்வதைக் கவனித்திருக்கலாம். உபாத்தியாயர்களுடைய நடை யுடை பாவனை,

சொல்லிக்கொடுக்கும் வகை எல்லாவற்றையும் கேலி செய்து மாணவர்கள் பேசுவார்கள். அந்த வகையிலே உபாத்தியாயரின் ஒழுங்கு விதிகளுக்கும், அதிகாரத்திற்கும் அடங்கித் தன்மதிப்புக் குறைந்த மாணவர்கள் ஈடு செய்துகொள்ளுகிறார்கள்.

எஜமானனால் கண்டிக்கப்பட்ட வேலைக்காரர்கள் தனியாக இருந்து அல்லது தங்களுக்குள்ளே கூடி எஜமானனை நிந்தித்துப் பேசிக்கொள்வார்கள்.

இவ்வாறு தன் மதிப்பை ஈடுசெய்துகொண்டு தாழ்வுணர்ச்சி மறைந்துவிட்டால் ஒரு வகையில் நல்லதுதான். அது அப்படியே அடிமனத்தில் ஆழமாகப் பதிந்து நிலைத்து, தாழ்வுமனக்கோட்டமாக மாறுவதில்தான் தீமையிருக்கிறது. அது ஒருவனுடைய வாழ்க்கையையே வெவ்வேறு வழிகளில் பாதிக்கத் தொடங்கும்.

எனக்கு ஒரு மாணவனைத் தெரியும். அவனுக்கு வகுப்பிலே ஏற்பட்ட அவமானத்தால் அதை ஈடுசெய்ய ஆடம்பரமாக உடுத்திக்கொள்ளுவான். புதிய கடிகாரம், கையிலே மோதிரம் என்றிப்படி வருவான். அம்மாதிரி மேலும் மேலும் ஆடம்பரம் செய்வதற்குப் பெற்றோரிடமிருந்து பணம் கிடைக்காது போகவே, சின்னத் திருட்டுக்களில் ஈடுபடலானான்.

இந்த நிலைமைதான் விரும்பத் தகாதது. திருட்டில் ஈடுபட்டது மேலும் அவனுக்குப் புதிய மனப் போராட்டத்தைக் கொடுக்கும். தன்மதிப்பை உயர்த்துவதற்காகத் திருட்டு என்னும் இழிந்த காரியத்தில் ஈடுபட்டதால் அது மேலும் தன்மதிப்பைக் குறைக்கிறது. அது தாழ்வுணர்ச்சியை மேலும் அதிகரிக்கச் செய்கிறது.

தாழ்வுணர்ச்சி என்பது எல்லோரையும் ஓரளவுக்கு ஏதாவது ஒரு சமயத்திலாவது பற்றத்தான் செய்யும் என்பது ஆட்லரின் கருத்து. எல்லோருக்கும் அவரால் சமாளிக்க முடியாத ஒரு நிலைமை எப்பொழுதாவது ஏற்படலாம். கடக்க முடியாதவாறு தடைகள் தோன்றலாம். தனது தகுதிக்கும் திறமைக்கும் அப்பாற்பட்ட ஒரு காரியத்திலே தாழ்மை உணர்வு தோன்றுகிறது. அதை அவன் வாய் விட்டுக் கூறுவிட்டாலும் அவனுடைய நடத்தையும் அவனுடைய செயல்களும் அதைக் காட்டிவிடும். தாழ்வுணர்ச்சியால் பாதிக்கப்பட்டவர்கள் எல்லோரும் ஒரே மாதிரியாக அதை வெளியில் காண்பிப்பார்கள் என்பதில்லை. ஒவ்வொருவரிடத்திலும் ஒருவிதமாக அது வெளியாகும். மிருகக் காட்சிசாலைக்குச் சென்ற மூன்று குழந்தைகள் சிங்கத்தைப் பார்த்தபோது அவர்களுக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளை வெளியிடுவதாகக் கூறும் ஒரு உபமானத்தின் வாயிலாக ஆட்லர் இதை அழகாக விளக்குகிறார். மூன்று குழந்தைகளும் சிங்கத்தின் முன்னால் தாழ்வுணர்ச்சி கொள்ளுகிறார்கள். ஒரு குழந்தை, "நான் வீட்டுக்கு இப்பொழுதே போகவேணும்" என்கிறது. "சிங்கத்தைக் கண்டு எனக்குத் துளிகூடப் பயமில்லை" என்கிறது மற்றொரு குழந்தை. "சிங்கத்தின் முகத்திலே காறித் துப்பட்டுமா?" என்று கேட்கிறது மூன்றாம் குழந்தை. ஒவ்வொரு குழந்தையின் வாழ்க்கைப் போக்கும் எவ்வாறு அமைகின்றதோ அதற்கு ஏற்றவாறு அது தனது தாழ்வுணர்ச்சியை வெளிப்படுத்துகிறது.

இவ்வாறு ஏற்படும் ஒவ்வொரு நிலைமையாலும் தாழ்வுணர்ச்சி ஏற்படலாமேயன்றி நிரந்தரமான தாழ்வு மனக்கோட்டம் உண்டாவதில்லை; அப்படி உண்டாகும்

நிலைமையும் ஏற்படலாம். அப்படி உண்டாவதனுல்தான் அது வாழ்க்கையையே பாதிக்கும் சக்தியாக மாறிவிடுகிறது.

இங்கு தாழ்வுணர்ச்சிக்கும் தாழ்வு மனக்கோட்டத்திற்கும் நுட்பமான வேறுபாடு கற்பிக்கப்பட்டிருப்பதைக் கவனிக்க வேண்டும். தாழ்வுணர்ச்சி என்பது ஒரு சந்தர்ப்பம் அல்லது ஒரு நிலைமையில் தோன்றுவது. அது நிலைத்து என்று மிருக்கும் என்பதில்லை. அந்த நிலை மாறியதும் அந்த உணர்ச்சியும் மாறிவிடும். ஆசிரியர் முன்னிலையில் பாடத்தை ஒப்பிக்க முடியாமல் வாய் குழறுகிறவன் வகுப்பை விட்டு வெளிவந்ததும் திருத்தமாகப் பேசுவான். இவ்வாறு தாழ்வுணர்ச்சி மாருமல் நிரந்தரமாக மனத்திலே பதிந்து நிற்கிறபோதுதான் அது தாழ்வு மனக்கோட்டமாக மாறுகிறது. அது அடிமனத்திலே மறைந்து நின்று வாழ்க்கையையே வெவ்வேறு வகைகளில் பாதிக்கும். தாழ்வுணர்ச்சியும் வாழ்க்கையை ஏதாவது ஒரு வகையில் பாதிக்கத்தான் செய்யும்; ஆனுல் அதைவிட நிரந்தரமான வலிமை கொண்டது தாழ்வு மனக்கோட்டம். சில உளவியலறிஞர்கள் இவ்வாறு இரண்டிற்கும் வேறுபாடு கற்பிக்காமல் இரண்டையும் ஒன்ருகவே கருதுவார்கள்.

# 12

# குற்றமும் குற்ற நடத்தையும்

• குற்றம் புரிகிறவன் ஒருவகை மன நோயால் பீடிக்கப் பட்டவனே என்கிற எண்ணம் இன்று வலுத்துக்கொண்டு வருகிறது. மன நோயின் காரணமாகவே அவன் சமூகத் திற்கு விரோதமான செயல்களில் ஈடுபடுகிறுன். மனநோய் என்றவுடனேயே பயித்தியம் என்று நினைக்கக்கூடாது. மன நோயில் எத்தனையோ வகைகள் உண்டு. குற்றம் புரியத் தூண்டுவதும் ஒரு வகையான மன நோய்தான் என்று பல உளவியலறிஞர்கள் இன்று நம்புகிறுர்கள்.

வறுமை, பசி, துன்பம் முதலியவைகளால் உந்தப் பட்டுப் பலர் குற்றம் புரிகிறுர்கள் என்பது மெய்தான். ஆனால் வறுமையால் வாடுகிறவர்கள் எல்லோரும் குற்றம் புரிவதில்லை. பசியால் மெலிந்து பலர் உயிர்விட்டிருக் கிறுர்கள். அவர்களெல்லாம் சமூகத்திற்கு விரோதமான செயல் ஒன்றிலும் ஈடுபடவில்லை. ஆகையால் குற்றம் புரிவதற்கு இவற்றைவிட முக்கியமான காரணம் ஒன் றிருக்கவேண்டும். மேலும் வறுமை முதலியவற்றால் பீடிக்கப்படாதவர்களும் குற்றம் புரிகிறதை நாம் கண்டிருக் கிறோம். ஆதலால் குற்ற மனப்பான்மை ஏற்படுவதற்கு வேறு முக்கிய காரணம் இருக்கவேண்டும்.

ஆதரவு பெருமல் மக்களால் ஏதாவது ஒரு வகையில் புறக்கணிக்கப்பட்டவன் தாழ்வுணர்ச்சி பெறுகிறுன். மாணவன் ஒருவன் தனது பாடங்களில் மற்ற மாணவர்

களைவிடப் பின்தங்கி இருக்கிருன் என்று வைத்துக் கொள்ளுவோம். அவனுக்கு நம்பிக்கையூட்டி விஷயத்தை விளங்கவைத்தால் அவனும் திருப்திகரமாகப் பாடங்களைப் படித்துக்கொள்ளுவான். அப்படி அனுதாபம் கிடைக்காவிட்டால் அவன் தான் மற்ற மாணவர்களைவிட அறிவில் குறைந்தவன் என்ற தாழ்வுணர்ச்சி பெறுகிருன். ஆசிரியர் அவனைக் கடுமையாகவோ இழிவாகவோ பேசி விட்டால் அதுவும் சேர்ந்து அவன் தாழ்வுணர்ச்சியைப் பலப்படுத்துகிறது. அவன் தனது குறைக்கு ஈடுசெய்வதாக எண்ணிக்கொண்டு வகுப்பின் ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் மீறி நடக்க ஆரம்பிக்கிருன். வகுப்பிலே குறும்பு செய்யும் மாணவர்களில் பலர் இப்படிப் பட்டவர்களாக இருப்பார்கள். இந்த மாணவர்களும் ஒரு வகை மன நோயால் பீடிக்கப்பட்டவர்களே. வகுப்பின் கட்டுப்பாட்டை மீறுதல், ஆசிரியரை எதிர்த்துப் பேசுதல் முதலிய செய்கைகளால் அவர்கள் மற்ற மாணவர்களின் முன்னிலையில் அதிகம் துணிச்சலும் தைரியமும் உடையவர்களாகக் காட்டிக் கொண்டு, அந்த வகையில் தமது உயர்வை நிலை நாட்டிக்கொள்ள விரும்புகிருர்கள்.

மேலே எடுத்துக் காட்டியவாறு ஏதாவது ஒரு வகையில் தாழ்வுணர்ச்சி பெற்றவர்கள் குற்றம் புரியும் மனப்பான்மையைப் பெறுகிருர்கள். இதுவே குற்றத்திற்கு முக்கிய காரணம். வறுமை, பசி, ஏமாற்றம் முதலியவை இந்தக் குற்ற மனப்பான்மையை மேலும் மேலும் குற்ற வழியிலே தூண்டுகின்ற தூண்டுகோல்களாக அமைந்து விடுகின்றன. "சைக்கிள் திருடன்" என்ற சினிமாப்படம் ஒன்று இத்தாலி நாட்டிலிருந்து கொஞ்ச காலத்திற்கு முன்பு நம் நாட்டிற்கு வந்திருந்தது. அதை மக்கள் திரளாக்ச் சென்று பார்த்து ரசித்தார்கள். யோக்கியனை ஒரு

உழைப்பாளி எப்படிச் சைக்கிள் திருடனுக மாறுகிருன் என்பதை அந்தச் சினிமாப் படம் சித்திரிக்கிறது. அந்த உழைப்பாளியின் சைக்கிள் திருட்டுப்போய்விடு கிறது. வேருெரு சைக்கிள் வாங்குவதற்கு அவனிடம் பணம் கிடையாது. அவன் தனது சைக்கிளைக் கண்டு பிடிக்க எவ்வளவோ முயற்சி செய்கிருன். போலீசின் உதவியும் பயனளிக்கவில்லை. சைக்கிள் இல்லாவிட்டாலோ அவனுக்கு மறுநாளே வேலை கிடையாது. அவனுக்குக் கிடைத்துள்ள வேலைக்குச் சைக்கிள் அத்தியாவசியம். அதனுல் அவன் மனங் கலங்குகிருன். மனத்திலே ஒரே குழப்ப முண்டாகிறது. கடைசியில் அவன் வேருெருவ னுடைய சைக்கிளைத் திருடி அகப்பட்டுக்கொள்ளுகிருன். வறுமை, ஏமாற்றம் இவற்றின் காரணமாக ஏற்பட்ட தாழ்வுணர்ச்சி எப்படிக் குற்ற மனப்பான்மையைத் தூண்டி யது என்பதை இந்த சினிமாக் கதை அழகாக விளக்கு கிறது.

எந்த வகையிலாவது தாழ்வுணர்ச்சி பெறுகிறவன் அதை ஈடுசெய்ய வெவ்வேருன வழிகளில் முயல்கிருன். ஓவியம் தீட்டுதல், காவியம் வரைதல் என்ற மாதிரி சமூகத் திற்கு இன்பங் கொடுக்கிற முறையில் குறைபாட்டை ஈடு செய்து தமது உயர்வை நிலை நாட்டுவது ஒரு வகை. அதை விட எளிதானது குற்றம் செய்து பலரும் தன்னைப்பற்றி அறியும்படி செய்வது. அது சமூக விரோதமான செயலாக முடிகிறது. தாழ்வுணர்ச்சியே குற்றச் செயல்களுக்குக் காரணமாகிறது என்பதற்கு அத்தாட்சியாகக் குற்றம் புரிகிறவர்களிற் பலர் உடற்குறையுள்ளவர்களாக இருப் பதைக் காணலாம். உடற்குறையால் அவர்களுக்கு ஏற் பட்ட தாழ்வுணர்ச்சி அவர்களைக் குற்றம் புரியத் தூண்டி யிருக்கிறது.

பயித்தியம் பிடித்தவன் தான் செய்யும் காரியத்தின் விளைவை உணராமலே செய்கிறான்; ஆனால் குற்றம் புரிகிறவன் தான் செய்வது பிறருக்குத் தீமையாக முடியும் என்பதையும், சமூக ஒழுங்கிற்கு மாறுபட்டது என்பதையும் தெரிந்தே செய்கிறான். பயித்தியக்காரன் தனது செய்கையை மற்றவர்கள் கண்ணிலிருந்து மறைக்க வேண்டுமென்று முயலுவதில்லை; குற்ற மனப்பான்மையுடையவன் தனதுசெயல்களைப் பிறருக்குத் தெரியாதவாறு மறைக்கவே முயல்வான். போலீசின் கண்ணிலும், நீதியின் கண்ணிலும் படாமல் திருடியவன் அந்த வகையில் தன்னை உயர்ந்தவனாக எண்ணித் தனது குறையுணர்ச்சியை ஈடுசெய்து கொள்ளுகிறான். போலீசைச் சாமர்த்தியமாக ஏமாற்றி விட்டதாகக் கருதி அந்த வகையில் உயர்வுணர்ச்சி பெறுகிறான்.

அவனிடமுள்ள தாழ்வுணர்ச்சியைப் போக்க முடியுமானால் அவன் நல்லவனாகிவிடுவான். இயல்பாகவே அவனுக்கு மற்றவர்களைப் போலச் சமூகத்திற்கு ஒத்த காரியங்களைச் செய்யவேண்டுமென்ற உணர்ச்சி இருக்கிறது. அந்த உணர்ச்சி அவனைத் தீய வழிகளிலிருந்து தடுக்க முயலுகிறபோதெல்லாம் அதைப் பல வகைகளில் மேலோங்காதவாறு அழுத்தியே அவன் தவறான காரியத்தில் இறங்குகிறான். ஆகவே தவறான காரியம் செய்வதும் அவ்வளவு எளிதில் ஆகிற காரியமல்ல; ஒருவன் தன் மனச்சாட்சியை அடக்கிவிட்டே அதில் ஈடுபட முடியும். ஆதலால் அவனுடைய தாழ்வுணர்ச்சியைப் போக்கிவிட்டால் திருந்திவிடுவான்; தவறு செய்ய விரும்பமாட்டான்.

ஆட்லரின் கொள்கைப்படி தாழ்வுணர்ச்சியே மனிதனை ஆட்டி வைக்கும் முக்கியமான சக்தியாகும். ஆதலால்

திருடுகிறவன், கொலை புரிகிறவன், குடிகாரன் இணை விழைச்சு வாழ்க்கையில் முறை தவறி நடக்கிறவன், மன நோய் பிடித்தவன் ஆகிய அனைவரும் ஒவ்வோர் அளவில் தாழ்வுணர்ச்சியால் பீடிக்கப்பட்டவர்களே யாவார்கள். அந்தத் தாழ்வுணர்ச்சி அவர்களுடைய தனித்த வாழ்க்கையின் போக்குக்கு ஒத்தவாறு வெவ்வேறு வழிகளில் வெவ்வேறு வேகங்களில் வெளியாகிறது. அந்தத் தாழ்வுணர்ச்சியைக் களைந்துவிட முடியுமானால் அவர்கள் அனைவரும் திருந்தி விடுவார்கள். சமூக சீர்திருத்தத்தில் நாட்டங் கொண்டவர்கள் இதை நன்கு உணர்ந்திருக்க வேண்டும்.

# 13

# மனக்கடுப்பு

முதல் உலக யுத்தம் முடிந்த சில ஆண்டுகளில் நாஜிக் கட்சி ஜெர்மனியிலே மிகுந்த செல்வாக்குப் பெற்றது. அதன் காரணம் என்ன? ஜெர்மன் மக்கள் முதல் உலக யுத்தத்தில் தோல்வியுற்றபின் தாழ்வுணர்ச்சி பெற்றுர்கள். தேசத்தில் ஒரு சோர்வு பிறந்தது. அந்தச் சமயத்தில் நாஜிக் கட்சி தோன்றியது. மக்களின் தாழ்வுணர்ச்சியைப் போக்க அது திட்டம் வகுத்தது. ஜெர்மானிய மக்களே அறிவிலும் ஆற்றலிலும் சிறந்தவர்கள்; அவர்களே ஆளப் பிறந்தவர்கள்; அவர்களே மனித இனத்தில் உயர்ந்தவர்கள் என்ற கருத்துக்கள் எங்கும் முழக்கப்பட்டன. ஜெர்மனியின் தோல்விக்குக் காரணம் யூதர்களும் அவர்களுடைய சூழ்ச்சிகளும் என்று கூறினர்கள். மக்களின் தாழ்வுணர்ச்சியின் விளைவாக யூதர்களின் மேல் மனக்கடுப்பு ஏற்பட்டது. தங்கள் இனத்தைப்பற்றிய உயர் வெண்ணத்தின் மூலமாகவும், யூதர்களிடம் ஏற்பட்ட கடுப்புணர்ச்சியின் மூலமாகவும் அவர்கள் உயர்வுணர்ச்சி பெற்றுர்கள். ஜெர்மனி மீண்டும் வலிமையும் நம்பிக்கையும் பெறத் தொடங்கியது. அந்தப் புதிய பலத்தை அளவோடு பயன்படுத்தியிருந்தால் இரண்டாம் உலக யுத்தமும் அதன் கொடிய விளைவுகளும் உண்டாகி யிருக்கமாட்டா. நாட்டின் தாழ்வுணர்ச்சியைப் போக்கித் தன்னம்பிக்கையை ஊட்டிய தலைவர்கள் அதைச் சரியான வழியில் பயன்படுத்தத் தவறிவிட்டார்கள்.

யூதர்களின் மேல் ஏற்பட்ட மனக்கடுப்பு அசுரத் தனமான செயல்களுக் கெல்லாம் காரணமாகிவிட்டது. உலகமே அதைக் கண்டு வெறுத்தது.

மனத்திலே ஏற்படும் கொதிப்பு, வெறுப்புணர்ச்சி, பகையுணர்ச்சி ஆகிய எல்லாவற்றையும் மனக்கடுப்பு என் கிற சொல் குறிக்கிறது.

மனக்கடுப்பு ஏற்படுவதால் தவருன செயல்கள் நடைபெறுகின்றன. ஆகையால் அதைத் தடுக்க முயல் வது அறிவிற் சிறந்த தலைவர்களின் கடமையாகும்.

பல ஆண்டுகளாக அடிமைப்பட்டுக் கிடந்த இந்தியா விலும் தாழ்வுணர்ச்சியின் ஆதிக்கத்தைச் சுமார் முப்ப தாண்டுகளுக்கு முன்பு வரையில் கண்டிருக்கலாம். மேனுட்டு நாகரிகம், மேனுட்டு விஞ்ஞானம் ஆகியவற்றிற்கு எதிராக நிற்கக்கூடிய ஆற்றல் நமக்குக் கிடையாது என்று பெரும்பான்மையான மக்கள் எண்ணிக்கொண்டிருந்தார்கள். நமது நாட்டுக் கலை, நமது தத்துவம், நமது பண்பாடு எல்லாமே தாழ்ந்தவை என்றும் மக்கள் கருதினுர்கள். இவ் வாறு தாழ்வுணர்ச்சியால் பாரதநாடு பீடிக்கப்பட்டு நலிந் தது. முதல் உலகயுத்தத்தில் தோல்வியுற்ற ஜெர்மனியின் நிலைமையை விட இங்கு நிலைமை மோசமாக இருந்தது. தேச விடுதலைக்காகப் போராடுவோம் என்று வீறுகொண் டெழுந்த தலைவர்களையும் பின்பற்ற மக்கள் தயங்கினுர்கள். ஆங்கிலேயரின் படைபலத்திற்கு எதிராக நாம் என்ன செய்ய முடியும் என்று சோர்வும் தோல்வி மனப்பான்மை யும் கொண்டார்கள். "நமக்கு ஆயுதம் இல்லை; படைப் பயிற்சி இல்லை; ஆகையால் ஆங்கிலேயரை எதிர்ப்பதென்பது முடியாத காரியம்" என்று கருதினுர்கள்.

இந்த நிலையில்தான் காந்தியடிகள் இந்திய விடுதலைப் போராட்ட அரங்கிலே தோன்றினர். மக்களின் தாழ்வுணர்ச்சியைப் போக்கி அவர்களுக்கு நம்பிக்கையூட்டு வது முதல் வேலை என்று அவர் கண்டார். யந்திர பீரங்கி யின் பலத்தைக் கண்டு தயங்கிய மக்களின் மனத்தில் யந்திர பீரங்கியைவிடப் பெரிய ஆயுதமொன்று தங்களிட மிருக்கிறது என்ற உணர்ச்சியைக் கொடுத்தார். இந்தியப் பண்பாட்டின் அடிப்படைச் சக்திகள் அன்பு, அஹிம்சை, சத்தியம் என்று அவர் தெளிவாக எடுத்துக் காட்டி அந்த உயர்ந்த லட்சியங்களே பீரங்கிகளைவிடச் சிறந்த வலிமை கொண்டவை என்று மக்களுக்குப் போதித்தார். துப்பாக்கி முதலிய போர்க் கருவிகள் இல்லாத நிலையையே வலிமைக் குச் சாதகமாக அவர் போதித்த கொள்கை செய்துவிட் டது. அஹிம்சை பலமற்றவனுடைய ஆயுதமல்ல; கோழையின் ஆயுதமல்ல; அதுவே உண்மையான தைரிய முடையவனுடைய ஆயுதம் என்று காந்தியடிகள் போதித் தார். இந்தியா ஒரு புதிய பலத்தோடு விழித்தெழுந்தது. நமது பண்பாட்டின் பெருமையையெல்லாம் மக்கள் உணர லாயினர். அவர்களுடைய தாழ்வுணர்ச்சி மாறி ஒரு புதிய எழுச்சி யுண்டாயிற்று.

ஜெர்மானியர் தாங்களே உயர்ந்த சாதியார் என்ற எண்ணத்தைப் பெற்ற பிறகு தாழ்வுணர்ச்சி நீங்கினர்கள் என்று முன்பே குறிப்பிட்டேன். அதோடு அவர்கள் தாங்கள் முதல் உலக யுத்தத்தில் தோல்வியடைந்ததற்கு யூதர்களே முக்கிய காரணமென்று அவர்கள் மேல் மனக் கடுப்புக் கொண்டார்களல்லவா? அது ஜெர்மனிக்கே கறை யூட்டுவதாக முடிந்தது. ஆனல் இந்தியாவில் ஆங்கில ஆட்சியை ஒழிக்கப் போராடுகின்ற காலத்திலேயே காந்தி யடிகள் ஆங்கிலேயர்களை வெறுக்கவில்லை; ஆங்கிலேயர்களை

வெறுக்கும்படியாக இந்திய மக்களுக்குக் கூறவும் இல்லை. அதனாலேயே மனக்கடுப்போ, வெறுப்போ ஏற்படவில்லை.

இந்திய நாட்டிற்குள்ளேயும் இன்று ஏற்பட்டுக் கொண்டிருக்கிற சமூக, பொருளாதார சீர்திருத்தங்களில் இதே அடிப்படையில் முயற்சிகளும், இயக்கங்களும் நடை பெறுமானால் அது இந்தியாவின் மிகப் பெரிய சாதனையாகும். சமூக சீர்திருத்தங்களையும் பொருளாதார மாறுதல்களையும் மனக்கடுப்பின்றி நிறைவேற்றி உலகுக்குப் புதிய வழிகாட்டிய பெருமை இந்தியாவுக்கு ஏற்படும்.

மனக்கடுப்பு என்பது மற்றவர்களிடம் வெறுப்பு, பகைமை, கோபம் முதலிய வழிகளில் வெளிப்படுகிறது. மனக்கடுப்பின் தன்மையே அதுதானே? அது ஒருவனுடைய அறிவை இருள் சூழ வைத்துவிடுகிறது; தெளிந்த சிந்தனையை மாசுபடுத்துகிறதும் அதுவே.

தாழ்வுணர்ச்சி வேறு வகையிலே ஈடுசெய்யப்பட்டு விட்டால் மனக்கடுப்பு ஏற்படுவதில்லை. மனத்திலே ஏற்படும் குமுறலை முற்றிலும் அடக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும் போதுதான் மனக்கடுப்பு ஏற்படுகிறது. ஒரு வேலைக்காரன் தனக்கு எஜமானனால் ஏற்படும் இழிவைத் தனியாக மற்ற வேலைக்காரர்களோடு எஜமானனைப் பற்றிக் கோபமாகப் பேசி அக்குமுறலைச் சாந்தப்படுத்திக்கொள்ளுவதுண்டு. அது ஒருவகையில் தாழ்வுணர்ச்சிக்கு ஈடுசெய்ததாக ஆகிவிடுகிறது. அப்படியில்லாமல் தனது ஆத்திரத்தை எப்பொழுதும் அடக்கி வைத்துக்கொள்ள வேண்டிய நிலைமை ஏற்படும்போது மனக்கடுப்பு ஏற்பட்டு வெறுப்பும் பகைமையும் கனல்விடத் தொடங்குகின்றன.

தண்டனை பெற்ற குழந்தை அதனால் தன்மதிப்புக்குப் பங்கம் ஏற்படவே அதை ஈடுசெய்வதற்காகத் தனது

பொம்மையைத் தண்டிக்கிறது. அதைத் தனது தந்தையென்று கற்பனை செய்துகொண்டு அதைத் திட்டுகிறது. தந்தையின் அதிகார ஸ்தானத்தைத் தான் வகித்துக் கொள்கிறது. வேலைக்காரன் தனது ஆத்திரத்தை மற்றவர்களிடம் பேசித் தீர்த்துக் கொள்கிறான். கணவனுடைய கோபத்தைப் பொறாத மனைவி அடுப்படியிலே சாமான்களை தடார் தடாரென்று வைக்கிறாள்; தன் அன்பிற்கெல்லாம் பாத்திரமாகிய குழந்தையைக்கூடத் திட்டுகிறாள்; அடிக்கவும் தோன்றுகிறது அவளுக்கு.

எனக்கு ஒரு சில்லரை வியாபாரியைத் தெரியும். அவருக்குத் தம் மனைவியின் மீது ஆத்திரம் ஏற்படும்போதெல்லாம் வீட்டிலுள்ள சட்டி பானைகளைத் தூக்கி வீசி உடைத்துவிடுவார். அவர் சாந்தமடைந்த பிறகு அவரிடம் இதைப் பற்றி விசாரித்தால், "சட்டி பானை போனால் ஓர் எட்டணாவிலே மறுபடியும் வாங்கிக்கொள்ளலாம். கோபத்திலே பெண்டாட்டியை அடித்துவிட்டால் அவள் என்னவாவது தன் உயிருக்குத் தீங்கு செய்து கொண்டால் பிறகு ஆயிரங் கொடுத்தாலும் கிடைக்குமா?" என்பார். அவர் நல்ல விவேகி என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் அந்த ஆத்திரமே உண்டாவதற்கு வழியில்லாதவாறு வாழ்க்கையை அமைத்துக்கொள்ள அவருக்குத் தெரிந்திருந்தால் இன்னும் நன்றாக இருந்திருக்கும். பெரும்பாலான மக்களால் இது முடிவதில்லை.

தன்மதிப்புக்குப் பங்கம் வரும்போது அதை ஈடு செய்துகொள்ளும் வழிகள் சிலவற்றை மேலே குறிப்பிட்டேன்; ஆண்-பெண் புணர்ச்சியின் மூலமாகவும் இவ்வாறு ஈடுசெய்துகொள்ளுவதுண்டு என்று சொல்லப்படுகிறது. ஏதாவது ஒரு வகையில் தாழ்வுணர்ச்சி பெறுகிற

வனுக்குப் புணர்ச்சி வேட்கை மிகுதியாக மேலெழு கின்றதாம்.

மதுபானமும், காம இச்சையில் திளைப்பதும் தாழ்வுணர்ச்சிக்கு ஈடுசெய்யும் செயல்களாகவே பலரிடம் தோன்றுகின்றன. ஆதலால் அவர்களைச் சீர்திருத்த விரும்புகிறவர்கள் அவர்களுடைய தாழ்வுணர்ச்சியின் காரணத்தைக் கண்டுபிடித்து அதை நீக்க முயலவேண்டும்.

தாழ்வுணர்ச்சி அதைக் கொண்டிருக்கும் மனிதனைத் தான் பாதிக்கிறது. அதனுல் அவனுடைய வாழ்க்கையின் போக்கே மாறிவிடுகிறது. ஆனுல் மனக்கடுப்பு அவனைப் பாதிப்ப தோடல்லாமல் மற்றவர்களையும் பாதிக்கிறது. மேலும் அது தொத்துநோய் போன்றது. எளிதிலே மற்றவர்களையும் பற்றிக் கொள்ளும். எங்கோ மறைந்து அழுந்திக் கிடந்த வெறுப்புணர்ச்சிகளை மற்றவர்களிடம் மேலெழும்படி செய்வதற்கு ஒருவனுடைய மனக்கடுப்புக்கு இருக்கும் வல்லமையைப் போல வேறென்றிற்கும் இல்லை.

ஆகையால் தாழ்த்தப்பட்ட மக்கள், பிற்போக்கான மக்கள், பொருளாதார நிலையில் மிகக் கீழாக இருப்போர் ஆகியவர்களிடம் இந்த மனக்கடுப்பு ஏற்படாமல் பார்த்துக்கொள்வது அவசியமாகும். அரசியல் கட்சிகளிலும் அதிகாரத்தில் இல்லாத மற்ற கட்சிகளிடத்தும் இவ்வித மனக்கடுப்பு ஏற்படாமல் பார்த்துக்கொள்வது நாட்டின் நன்மைக்கும் முன்னேற்றத்திற்கும் உகந்ததாகும்.

# 14

# தாழ்வுணர்ச்சியின் விசித்திரம்

தாழ்வுணர்ச்சிக்கு ஒரு விசித்திரமான போக்குண்டு. தனி மனிதன் தாழ்வுணர்ச்சியால் பீடிக்கப்படும்போது அவன் அதன் வேகத்தை அதிகமாக உணருகிறான். ஆனால் அவன் அந்த உணர்ச்சியை மற்றவர்களோடு சேர்ந்து உணரும்போது அதன் வேகம் குறைகிறது. இது விநோதமாகத் தோன்றலாம். ஆனால் அதுதான் உண்மை.

வகுப்பிலே ஒரு மாணவன் தனது பாடத்தைச் சரியாகப் படித்து வராதபோது அவனுக்குத் தண்டனை கிடைத்தால் அது அவன் உள்ளத்திலே பலமாகத் தாக்குகிறது. தனியாகப் பெஞ்சி மேலே நிற்கிற மாணவன் தன் குறைபாட்டிற்காக அதிகமாக வருந்துகிறான். ஆனால் அதே வகுப்பில் பல பேர் அந்தப் பாடத்தைப் படித்து வராமல் அதற்காக அதே தண்டனை பெறுவார்களானால் அவர்கள் அதற்காக அவ்வளவு வருந்துவதில்லை. பாடம் படித்து வராததற்காக எல்லா மாணவர்களையும் பெஞ்சி மேல் நிற்கச் செய்யும் நிலைமை ஏற்படும்போது அந்தத் தண்டனையே வேடிக்கையாக முடிந்துவிடுகிறது. எல்லோரையும் உட்காரும்படி சொல்லி மறு நாளைக்கு நன்கு படித்து வரும்படி உத்தரவிடுவதைத் தவிர ஆசிரியருக்கு வேறொன்றும் தோன்றுவதில்லை.

தாழ்வுணர்ச்சியால் பாதிக்கப்பட்டவர்களை ஒன்றுசேர்ப்பது எளிது. மேலும் ஏதாவது ஒருகொள்கைக்கு அல்லது

ஒரு மனிதனுக்கு அல்லது ஒரு வருக்கத்திற்கு எதிராகப் பலம் சேர்ப்பது எளிது; சாதகமாகச் சேர்ப்பது அவ்வளவு எளிதல்ல. கட்டுப்பாட்டிற்கு எதிராகப் பலம் திரட்டுவது எவ்வளவு சுலபமோ அவ்வளவு சுலபமாக அதற்குச் சாதகமாக பலம் திரட்ட முடியாது. முதலாளிக்கு எதிர்ப்பாகப் பலம் சுலபமாகச் சேரும். நாஜிக் கட்சியார் ஜெர்மன் மக்களின் இன உயர்வைக் கூறிப் பலம் திரட்டியதைவிட யூதர்கள் முதலியவருக்கு எதிர்ப்பாகத் தான் அதிக பலம் திரட்டினார்கள். ஒரு நாட்டிலுள்ள மக்களையெல்லாம் 'ஒன்றுபட்டா லுண்டு வாழ்வே' என்று கூறி ஒன்றுபடச் செய்வதைவிட, ஏதாவது ஒரு கூட்டத்திற்கு அல்லது நாட்டிற்கு விரோதமாக ஒன்றுபடச் செய்வது எளிது. யுத்த காலத்திலே உள்நாட்டு அரசியல் கட்சி வித்தியாசங்களெல்லாம் மறந்து போகின்றன. ஒரு நாட்டின் மக்களெல்லாம் தங்களுக்குள் உள்ள அபிப்பிராய பேதங்களை மறந்து ஒன்று சேர்வதை அப்பொழுது காணலாம். இது மற்றொரு நாட்டிற்கு எதிர்ப்பாக ஏற்பட்ட ஒற்றுமையே யாகும்.

சர்வாதிகாரம் செய்யும் ஒருவனுக்கு எதிர்ப்பு மறைமுகமாகத் திரளுவதை நாம் கண்டிருக்கிறோம். கடுந் தண்டனைகளுக்கும், இரகசியப் போலீசின் கடுபிடிகளுக்கும் இடையிலேயும் அந்த எதிர்ப்புச் சக்தி திரளுகிறதல்லவா?

ஒரு பிரதேசத்திலே குறைந்த எண்ணிக்கையுள்ள ஒரு வகுப்பினரை ஒன்று சேர்ப்பது எளிது. அவர்கள் பெரும்பான்மை மக்கள் முன்னிலையில் ஒரு தாழ்வுணர்ச்சி பெறுகிறார்கள். அதன் காரணமாக அனைவரும் சுலபமாக ஒன்று சேர்ந்துவிடுகிறார்கள். அவ்வாறு பெரும்பான்மையான மக்களைச் சிறுபான்மையோருக்கு எதிராகச் சேர்ப்பது எளிதல்ல.

# 15

# ஒரு வகுப்பாரின் தாழ்வுணர்ச்சி

எங்கள் கிராமத்திற்குப் போகும்போதெல்லாம் எனக்கு ஒரு சங்கடமான நிலைமை ஏற்படுவதுண்டு. அங்கு வாழும் சக்கிலியர், பறையர் என்று சொல்லப்படும் ஹரிஜன மக்கள் என்னையும், என்னைப் போன்ற மற்ற 'மேல் வகுப்பு' இந்துக்களையும் கண்டதும், உடலை வளைத்துக் குறுகி, "சாமி" என்று கூறிக் கும்பிடுவார்கள். நாங்கள் பாதையிலே ஓர் ஓரத்திலே நின்றிருந்தாலும் அவர்கள் நடுப் பாதையிலே போகமாட்டார்கள். எங்களுக்கு எதிர்ப்புறமாகவுள்ள பாதையின் மறு ஓரத்திலே வேலியோடு வேலியாகப் பதுங்கிச் செல்லுவார்கள்.

ஹரிஜனக் குழந்தைகள் சற்றுத் தாராளமாக மற்றக் குழந்தைகளுக்கு அருகே விளையாட வந்தால் வயது வந்த ஹரிஜனப் பெற்றோர்களும் மற்றவர்களும் அதை வன்மையாகக் கண்டிப்பார்கள். குழந்தைப் பருவ முதலே அவர்கள் தாழ்ந்தவர்கள் என்கிற எண்ணம் பல வகைகளிலே ஊட்டப்படுகிறது.

ஹரிஜனங்களின் தாழ்வுணர்ச்சி அவர்களுடைய நடத்தை, பேச்சு முதலானவற்றில் வெளிப்படுவதைப் பார்க்கலாம்.

இந்தத் தாழ்வுணர்ச்சியால் பாதிக்கப்பட்ட ஹரிஜன மக்களில் பலர் சமத்துவம் கிடைக்கும் என்ற நம்பிக்கையால் மதம் மாறுகின்றனர். பிற மதங்களில் அவர்களுக்கு உண்மையான பற்றுதலோ நம்பிக்கையோ ஏற்பட்டுத்தான் மதம் மாறுகின்றனர் என்பதில்லை. பெரும்பாலும் சமத்

துவ ஆசையே மத மாற்றத்துக்குக் காரணமாகிறது. புது மதத்திலே உண்மையான நம்பிக்கையும் தெளிவும் ஏற்பட்டிருக்குமானால் மதம் மாறியவர்களிலும் பழைய மேல் வகுப்பு கீழ் வகுப்பு என்ற வித்தியாசமிருக்க முடியாது. கலியாணம் முதலிய சம்பந்தங்கள் வைத்துக் கொள்வதில் இந்த உயர்வுதாழ்வு குறுக்கிடுவதை மதம் மாறிய பலரிடம் இன்று காண்கிறோம். ஆனால் இந்த வித்தியாசம் மத மாற்றத்திற்குத் தடையாக நிற்பதில்லை. ஏனெனில் இந்து மதத்திலிருந்தபோது அவர்களுக்கிருந்த அதே தாழ்வு இப்போது நிச்சயமாக இருப்பதில்லை; மேலும் அவர்கள் இந்துக்களால் தீண்டத்தகாதவர்கள் என்று ஒதுக்கப்படும் நிலையிலிருந்து விடுபட்டு அவர்களுக்குச் சமமாகிவிடுகிறார்கள்.

மதமாற்றம் தவறென்றோ சரியென்றோ கூறுவது இங்கு என்னுடைய நோக்கமல்ல. மதமாற்றத்திற்கு முக்கியமான அடிப்படையாகவுள்ள ஓர் உளவியல் காரணத்தை எடுத்துக் கூறுவதே எனது நோக்கம் (இதே போலத்தான் அரசியல் முதலான மற்ற பிரச்சினைகளையும் இங்கு நான் உளவியல் நோக்கோடு எடுத்துக்காட்டுகிறேன்.) மதமாற்றத்தைத் தடுக்க விரும்புகிறவர்கள் இந்த முக்கிய காரணத்தை உணர்ந்து தாழ்வுணர்ச்சியைக் களையவேண்டிய நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும்.

தாழ்ந்த வகுப்பினரிலும் நவீனக் கல்வி கற்றவர்கள், பொருளாதார உயர்வு பெற்றவர்கள் ஆகியவர்களிடமே தாழ்வுணர்ச்சி அதிகமாகத் தோன்றுவதைப் பார்க்கலாம். அது மற்ற மேல் வகுப்பு இந்துக்களிடம் மனக்கடுப்பாக மாறுவதையும் காண்கிறோம்.

கல்வியறிவு அதிகமாக அதிகமாக உணர்ச்சிகளின் வேகத்தை யுணரும் சக்தியும் நுட்ப மடைகிறது. அதனால்

கற்றவன் தனது தாழ்வை அதிகமாக உணருகிறுன். மேலும் தனக்கும் மற்றவர்களுக்குமுள்ள வித்தியாசம் அதிகமில்லாதபோதுதான் அந்த வித்தியாசத்தைப் பற்றிய உணர்வு அதிகமாக இருக்கிறது.

பண்ணையிலே வேலை செய்யும் ஹரிஜனப் பணியாள் ஒருவன் பண்ணை எஜமானனுகிய 'மேல் வகுப்பு' ஹிந்து தன்னை இழிவாக நடத்துவதற்காக வருந்துவதைவிடத் தன்னோடு வேலை செய்யும் 'மேல் வகுப்பு'ப் பணியாள் ஒருவன் தன்னை அவ்வாறு நடத்த முயலுவதற்கு அதிகமாக வருந்துவான்.

சிறிய உத்தியோகஸ்தன் ஒருவன் மிக உயர்ந்த ஸ்தானத்திலிருக்கும் உத்தியோகஸ்தனேடு அந்த உத்தியோகங் காரணமாகப் பகையுணர்ச்சியோ போட்டியுணர்ச்சியோ கொள்வதில்லை. அவனுக்கு அடுத்த உயர்ந்த படியிலிருப்பவனிடமே இந்த உணர்ச்சிகள் சாதாரணமாகத் தோன்றுகின்றன.

உயர்வு தாழ்வுள்ள ஜாதிகள் பலவற்றிலும் இந்த நிலைமை யிருப்பதைக் காணலாம். தன்னைவிடச் சற்று மேலே யிருக்கிற ஜாதியினிடத்திலேதான் அதிகமான வேற்றுமை யுணர்ச்சி ஓங்குகிறது.

அரசியல், பொருளாதாரம், ஜாதிப்பிரிவினை முதலான துறைகளிலெல்லாம் இந்த வேற்றுமை யுணர்ச்சி தோன்றுவதை நாம் பார்க்கிறோம்.

இந்தியா இரண்டாகப் பிரிந்து பாக்கிஸ்தான் ஏற்படுவதற்கும், ஆந்திர நாட்டிலே ரெட்டிகளுக்கும் கம்மவார்களுக்கும் போட்டி ஏற்பட்டிருப்பதற்கும், தமிழ் நாட்டிலே பிராம்மணர், பிராம்மணரல்லாதாருக்கும் இடையே வேற்றுமை யுணர்ச்சி யேற்படுவதற்கும் அடிப்படையான உளவியற் காரணத்தை மேலே கூறியவற்றிலிருந்து அறியலாம்.

# 16

## தொகுப்புரை

அடிமனத்தைப் பற்றி ஆராய்ந்த சிக்மண்ட் பிராய்டுக்கும் அவரை ஆரம்பத்தில் பின்பற்றிய ஆட்லருக்கும் ஏற்பட்ட கருத்து வேற்றுமையைப் பற்றி மீண்டும் ஞாபகப்படுத்திக் கொண்டால் தாழ்வுணர்ச்சியைப் பற்றித் தெளிவாகவும் சுருக்கமாகவும் அறிந்துகொள்ள உதவியாக இருக்கும். அடிமனத்தின் முக்கியத்தை இரண்டு பேரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆனால் ஆட்லர் தமது அனுபவமும் ஆராய்ச்சியும் முதிரமுதிர அடிமனத்தைப்பற்றி பிராய்டைப் போல அழுத்திக் கூறுவதை விட்டுவிட்டார். அடிமனத்தை மனத்தின் புரிந்துகொள்ளாத பகுதி என்று கொண்டாலே போதும் என்று அவர் கருதலானார். சிக்மண்ட் பிராய்டு, பாலுந்தலே வாழ்க்கையின் போக்கை நிச்சயிக்கும் அடிப்படைச் சக்தி என்று கருதுகிறார். மற்றவை யெல்லாம் அதற்குக் குறைந்தவை தானென்றும் அந்தப் பாலுந்தல் என்னும் சக்தி குழந்தைப் பருவத்திலிருந்தே தனது ஆதிக்கத்தைக் காட்டுகிறது என்றும் அவர் கூறுகிறார். ஆட்லர் பாலுந்தலின் வலிமையை ஒப்புக்கொண்ட போதிலும் அதுவே வாழ்க்கையின் போக்கை நிருணயிக்கிறது என்பதை ஏற்றுக் கொள்ளுகிறதில்லை. தாழ்வுணர்ச்சி, அதன் விளைவாகத்தோன்றும் உயர்வுந்தல் ஆகிய இவையே வாழ்க்கைப் போக்கின் அடிப்படையை வகுக்கின்றன என்பது இவருடைய கொள்கை. ஒவ்வொரு மனிதனுக்கும் ஒரு தனிப்பட்ட வாழ்க்கை நடை அமைகிறது. அவ்வாறு

அமைவதற்குக் காரணமாக இருப்பவை அவனுடைய தாழ்வுணர்ச்சி - உயர்வுந்தல் ஆகிய சக்திகளாகும்.

அடி மனத்திலே எத்தனையோ தகாத இச்சைகளும் அடக்கப்பட்ட உணர்ச்சிகளும் அழுந்திக் கிடக்கின்றன; அவை ஒருவனுடைய வாழ்க்கையைக் கட்டுப்படுத்துகின்றன; அவற்றின் வலிமை பெரிது. இந்தக் கருத்துக்களில் பிராய்டுக்கும் ஆட்லருக்கும் அதிக வேறுபாடில்லை.

ஒருவனுடைய அடிமனத்திலே அவனது நிறைவேறாத உணர்ச்சிகள் அழுந்திக் கிடப்பதோடு மனித இனத்தின் உணர்ச்சிகளும் அனுபவங்களும் கூடவே இருக்கின்றன என்பது யுங் என்ற உளவியலறிஞரின் கருத்து. அதைப் பற்றி இங்கு விரிவாகத் தெரிந்துகொள்ள வேண்டியதில்லையாயினும் பொதுப்பட அவருடைய கருத்தை அறிந்திருப்பது நல்லது.

அடிமன உணர்ச்சிகளால் விளையும் கோளாறுகளைப் புரிந்துகொள்வதற்கும், அவற்றைப் போக்குவதற்கும் தடையில் தொடர்முறை, கனவுப்பாகுபாடு ஆகிய இரண்டு முறைகளை பிராய்டு வகுத்தார். இவற்றோடு ஒருவன் தன் வாழ்க்கையில் எவ்வாறு நடக்கிறான், எவ்வாறு இதுவரை நடந்து வந்தான் என்பனவற்றையும் சேர்த்துப் பார்த்தால் அடிமன உணர்ச்சிகளையும் சிக்கல்களையும் நன்றாக அறிந்துகொள்ளலாம் என்பது ஆட்லர் கருத்து. ஒருவனைப் பற்றி நன்கு அறிந்துகொள்ள அவனுடைய முன்னோர்களின், வாழ்க்கை முறை, அவன் பிறந்து வளர்ந்த மனிதக் கூட்டத்தின் அனுபவங்கள், பழக்க வழக்கங்கள், அவர்களுடைய நாடோடிக் கதைகள், சடங்குகள் முதலியவைகள் ஆகியவற்றையும் சேர்த்துப் பார்க்கவேண்டும் என்பது யுங்கின் கொள்கை.

வெளி மனத்தைப் பற்றி மட்டும் ஆராய்ந்த உளவிய லறிஞர்கள் பல உண்மைகளைக் கண்டு கூறினார்கள். அடி மனத்தைப் பற்றி ஆராய்ந்து, உளவியலில் பிராய்டு ஒரு புதிய சகாப்தத்தையே உண்டுபண்ணினார். தாழ்வுணர்ச்சி யைப் பற்றி ஆராய்ந்து ஆட்லர் மனப்பகுப்பியலுக்கு மேலும் வலிமை தந்தார். மனித இனத்தின் அனுபவங் களும் உணர்ச்சிகளும் முற்றிலும் அழிந்து போய்விடாமல் இன்னும் மனித உள்ளத்தில் இடம்பெற்று அவர்களுடைய போக்கை அமைப்பதில் ஒரு முக்கிய ஸ்தானம் பெறுகிறது என்கிற உண்மையைக் கண்டு உளவியலை இன்னும் ஒரு படி முன்னேறச் செய்தார் யுங்.

பிராய்டின் கருத்துப்படி ஒருவனுடைய வாழ்க்கை யின் அமைப்பெல்லாம் அவனுடைய குழந்தைப் பருவத்தி லேயே சுமார் ஐந்து வயதுக்குள் தீர்மானமாகிவிடுகிறது. அதற்கு மேலே அந்தத் தீர்மானப்படியே வாழ்க்கை மலர்ச்சியடைகிறது. இந்த அமைப்பை அதிகமாக மாற்ற முடியாது. ஆதலால் ஒருவனுக்குக் குழந்தைப் பருவத் தில் கிடைக்கும் அனுபவங்களும், சூழ்நிலையும், வளர்ப்பு முறையும் அவனை உருவாக்குவதில் அநேகமாகப் பூரண ஆதிக்கத்தையும் பெற்றுவிடுகின்றன. ஆட்லரும் யுங்கும் குழந்தைப் பருவ அனுபவங்களின் முக்கியத்தை ஏற்றுக் கொண்டாலும் பின்னும் ஒருவன் தனது வாழ்க்கையின் அமைப்பை மாற்ற முடியும் என்று பிராய்டைவிட அதிக மாக நம்புகிறார்கள்; அவ்வாறு மாற்றுவதற்குத் துணிச்ச லும் நம்பிக்கையும் உண்டாகவேண்டும் என்கிறார் ஆட்லர். "உன்னையே நீ எண்ணிப்பார்" என்று கூறுவது போல ஒருவன் தனக்குள்ளேயே தன்னைப் பற்றி ஆழ்ந்து சிந்தனை செய்து பார்க்கவேண்டும் என்று யுங் கூறுகிறார். இவ்வாறு யுங் கூறும் கொள்கை மதங்

கள் போதிக்கும் கொள்கையோடு தொடர்புபட்டிருக்கிறது.

உளவியலறிஞர்களிலே இவ்வாறு வெவ்வேறு கருத்துக்கொண்ட தனிப் பிரிவினர் உண்டு. பிராய்டு, ஆட்லர், யுங் ஆகியவர்களுக்குப் பின் வந்த உளவியலறிஞர்களில் வேறு புதிய கருத்துக்களைக் கூறுபவர்களும் இருக்கிறார்கள். நாம் அவர்களோடு எந்த ஒரு தனிப் பிரிவிலும் சேரவேண்டியதில்லை. ஒவ்வொரு பிரிவும் நமக்களிக்கின்ற உண்மைகளை நாம் ஆராய்ந்து மனத்துட்கொண்டு பயனடையலாம். மனத்தின் மர்மங்களை அறிந்துகொள்வது எளிதல்ல. மேலே கூறிய எல்லாப் பிரிவினரும் கூறும் கருத்துக்களையெல்லாம் சேர்த்துப் பார்க்கின்றபோது ஒரு வேளை இந்த மாய மனத்தைப்பற்றி சற்று நன்றாக அறிந்து கொள்ள முடியலாம் என்று தோன்றுகிறது.

# பிற் சேர்க்கை

## சில கலைச் சொற்கள்

அடி மனம்–நனவிலி மனம்–மறை மனம்—Unconscious mind

இடை மனம்–நனவடி மனம்—Subconscious mind

உயர்வுந்தல்—Drive for superiority

உளப்பகுப்பியல்–மனப்பகுப்பியல்—Psycho-analysis

கனவுப் பாகுபாடு—Dream analysis

கோட்டம்–சிக்கல்–மனக்கோட்டம்—Complex

தடையிலாத் தொடர் முறை–Method of free association

தன் மதிப்பு—Auto-estimation

தாழ்வுணர்ச்சி—Inferiority feeling

தாழ்வு மனக்கோட்டம்—Inferiority complex

நனவடி மனம் : பார்க்க : இடை மனம்

நனவிலி மனம் : பார்க்க : அடி மனம்

நனவு மனம்—Conscious mind

பாலுணர்ச்சி—Sex feeling

மறை மனம் : பார்க்க : அடி மனம்

மனக்கடுப்பு—Resentment

மனக்கோட்டம் : பாக்க : கோட்டம்

மனப் பகுப்பியல் : பார்க்க : உள்ப் பகுப்பியல்

லிபிடோ—Libido